# கல்கி

KALKI 18.8.96 ரூ 3.00



'BAR' ஆளும் பெண்கள்!

# வெண்கலத்தைத் தங்கமாக்கிய லியாண்டர்!

• வேலூரில் உள்ள பெண்கள் சிறைச்சாலை



# பக்திப் பரவசத்தில் இந்திரகுமாரி!

ஊழல் குற்றச்சாட்டுக்களின் பேரில் முதலில் கைது செய்யப்பட்டவர் இந்திரகுமாரி. (எஸ்.டி.எஸ். விவகாரம், தனி.) இப்போது செல்வ கணபதி; கு.ப.கிருஷ்ணன் தாம் கைது ஆவதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். ஜெயலலிதா முன் ஜாமீன் கேட்டிருக்கிறார். இப்படி விஷயம் நீண்டு கொண்டிருந்தாலும், முதலில் கைது செய்யப்பட்ட இந்திரகுமாரி எப்படி இருக்கிறார்? வேலூருக்கு ஒரு நடை போய் விட்டு வந்தோம்.

தமிழ்நாட்டிலேயே பெண்களுக்கான தனிச் சிறை இருப்பது வேலூரில்தான். டவுனை விட்டு ஐந்து கி.மீ. தள்ளி, மிகவும் அமைதியான சூழலில் சிறை வளாகங்கள் இருக்கின்றன. மத்திய சிறையில் ஆண் கைதிகள் மட்டும்தான். அதற்குச் சற்று தள்ளி பெண்கள் சிறை! ஒரே சமயத்தில் இருநூறு கைதிகளை அடைக்கக் கூடிய வசதி. பெரிய கதவுக்குள் இருக்கும் திட்டி வாசல்.

உறவினர்களும் நெருங்கியவர்களும் த விர மற்றவர்களுக்கு விசாரணைக் கைதிகளைப் பார்க்க அனுமதி கிடையாது. இந்திர குமாரியைப் பொறுத்த வரையில் அவர் விசாரணைக் கைதி. பட்டப் படிப்பு படித்ததாலும், அமைச்சராகப் 'பணி' செய்ததாலும், ஸ்பெஷல் கிளாஸ் கொடுத்திருக்கிறார்கள். இதுவே குற்றம் நிரூபிக்கப்பட்ட கைதியாக இருந்தால் 'ஏ' கிளாஸ் கொடுப்பார்கள்.

விசாரணைக் கைதி வேலை எதையும் செய்ய வேண்டியதில்லை. ஜெயில் சட்டப்படி ஸ்பெஷல் கிளாஸ் கைதிகளுக்குப் பல வசதிகள் உண்டு. காலை ஏழு மணிக்கு டீ. எட்டு மணிக்கெல்லாம் கோதுமை தோசை அல்லது உப்புமா. பன்னிரண்டு மணிக்கு சாம்பார், ரசம் பொறியலுடன் சாதம். மாலை ஆறு மணிக்குள் இரவுச் சாப்பாடு முடிந்து விடுகிறது. மதிய மெனுதான். சிறைக்குள் நூலகம் உண்டு. விசிட்டர்கள் பிஸ்கட், ரொட்டி, மட்டும்தான் கொடுக்கலாம். மற்ற எதுவாக இருந்தாலும் (மாற்று உடைகளைத் தவிர) திட்டி வாசலுக்கு வெளியிலேயே பறிமுதல்செய்துவிடுவார்கள்!



"ஆச் சரியமாக இருக்கே, உங்களோட துணி மணிகளை பாங்க் லாக்கர்ல வைச்சிருக்கீங்களா?"
"ஆமாம், என்ன பண்றது? வீட்ல இருந்தா என் மனைவி எல்லாத்தையும் பாத்திரக்காரனுக்கு போட்டுர்றாளே!"
— பா. ஜெயக்குமார்

பத்திரிகையாளர்கள் என்றால் சிறை அதிகாரிகள் "கிட்டவே வர வேண்டாம்" என்று ஓடி ஒதுங்குகிறார்கள்.

"காலை, மதியம் சிறையில் கொடுக்கப்படுவதைச் சாப்பிடும் இந்திரகுமாரி, மாலை மட்டும் சப்பாத்தி சாப்பிடுகிறார். காரணம், அவருக்கு உள்ள சர்க்கரை வியாதி. பெரும்பாலும் பக்திப் புத்தகங்கள் படிக்கிறார். மாலை, ஜெயிலின் உள்ளே இருக்கும் கோயிலில் போய் இரண்டு மணி நேரம் அமைதியாக உட்கார்ந்திருக்கிறார். முக்கியமான தினப் பத்திரிகைகள், வாரப் பத்திரிகைகள் (கல்கி உட்பட) ஜெயிலில் வாங்கப்படுகின்றன. அவற்றையும் படிக்கிறார்" என்று நம்மிடம் சொன்னார் இ.குமாரிக்கு நெருங்கிய ஒருவர்.

இந்திர குமாரியின் கணவர் பாபு தினசரி காலை பதினோரு மணிக்கு ஜெயிலில் ஆஜராகி, இருபது நிமிடங்கள் மனைவியைச் சந்தித்துப் பேசி விட்டுக் கிளம்புகிறார். சில சமயம், சென்னையிலிருந்து இ.குமாரியின் மகளும், மருமகனும் வந்து பார்த்து விட்டுச் செல்கிறார்கள். முதல் நாள் சிறையில் அடைக்கும் போது, கட்சிக்காரர்கள் வந்ததோடு சரி. இப்போது யாரும் எட்டிப் பார்ப்பது கூட கிடையாது.

"என் மனைவி இனி அரசியலில் ஈடுபடமாட்டார்" என்று இந்திர குமாரியின் கணவர் விட்ட அறிக்கை, அவரின் சம்மதத்தின் பேரில் விடப்பட்டதா?" என்ற கேள்விக்கு இன்னமும் சரியாக விடை கிடைக்கவில்லை. சென்னை கோர்ட்டுக்குக் கொண்டு வந்த சமயம், ஆங்கிலப் பத்திரிகை நிருபர் இது பற்றிக் கேட்ட போது, எதுவும் சொல்ல மறுத்து விட்டார் இந்திர குமாரி.

ஆனால் கணவர் பாபுவின் கோபத்துக்குக் காரணம், இந்திர குமாரி கைது செய்யப்பட்ட போது அதைக் கண்டித்து ஜெ. அறிக்கை விடாததுதான்!

இது தவிர, மகளிர் அணிச் செயலாளர் பதவியையும் பிடுங்கி விட்டார். "சசிகலா கைதாகும் போது கூட, கடைசி வரை உடனிருந்தார் அம்மா. மிகவும் நெருங்கியிருந்தவரை எட்டி உதைக்க வேண்டிய அவசியமென்ன? இதுதாங்க... அண்ணனுக்கு (பாபு) கோபம்" என்று வேலூரில் நம்மிடம் சொன்னார் கட்சித் தோழர் ஒருவர்.

இதற்கிடையில் போலீஸார் கோர்ட்டில் தாக்கல் செய்யும் ஸ்டேட்மெண்டுகளை உன்னிப்பாகப் படித்து, தமது வழக்கறிஞர்களுடன் விவாதித்து வருகிறார் இந்திர குமாரி. முக்கியமாக அளவு குறைவான சேலை, வேட்டிகள் வாங்கி, விநியோகித்திருக்கிறார்கள் என்பது குற்றச்சாட்டு. "அப்படி, அளவு குறைவான வேட்டி சேலை பெற்றதாகப் பொது மக்களில் யாராவது குற்றம் சாட்டியிருக்கிறார்களா?" என்ற கேள்வி இந்திர குமாரியின் தரப்பிலிருந்து எழுப்பப்படுமாம்.

அ.தி.மு.க.வில் இப்போது வீசும் புயலைப் பற்றியும் தன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை பற்றியும், இந்த முறை கோர்ட்டுக்கு வரும் போது தமது கருத்துக்களைப் பத்திரிகையாளர்களிடம் கூறலாம் என்றிருக்கிறாராம் இந்திர குமாரி. இது தவிர, ஜெயலலிதாவிடமிருந்தும் இந்திரகுமாரிக்குச் சாதகமான அறிக்கையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள், அவருக்கு வேண்டிய ரத்தத்தின் ரத்தங்கள்!

"பாடுபட்டது", "சின்னம்மாவுக்கும் (சசி) பெரியம்மாவுக்கும் (ஜெ) தானே" என்றார் அவர்களில் ஒருவர்.

— ப்ரியன்

படம் : பேஜர் கே. மூர்த்தி



"என்னது! கடவுள் கூட காலத்துக்கேற்றபடி மாறிட்டாரா?"
"ஆமா! அந்தக் கிராமத்தில் நான் பார்த்த அய்யனார் சிலையின் கையில் அரிவாளுக்குப் பதில் ஏ.கே. 47 துப்பாக்கி இருந்தது!"
— உ. ராஜாஜி

# வெண்கலத்தைத் தங்கமாக்கிய பெய்ஸ்!

ஹாக்கி மூழும் பகதூர் பிரசாதும், ஜஸ்பால் ராணாவும், பப்பு யாதவ்வும், நம் நம்பிக்கைகளை எல்லாம் பொடிப் பொடி யாக்கிவிட, பதக்கப்பட்டியலில் இந்தியாவின் பெயரே இருக்காதோ என்று இருந்த நிலைமை யில்...

டென்னிஸில் ஒரு வெண்கலப் பதக்கத் தைப் போராடிப் பெற்றுக் கொண்டு வந்தார் லியாண்டர் பெய்ஸ்.

வயது 23. கல்கத்தாக்காரர்.

நாலு வருடங்களுக்கு முன், பார்ஸிலோனா ஒலிம்பிக்ஸில், ரமேஷ் கிருஷ்ணனுடன் இரட்டையர் ஆட்டத்தில் கால் இறுதிப் போட்டி வரை வந்து, தவறவிட்ட வெண்கலப் பதக்கத்தை, அட்லாண்டாவில் தட்டிக் கொண்டு வந்து விட்டார் லியாண்டர் பெய்ஸ். இத்தனைக்கும் டேவிஸ் கப் ஆடுகிற புல்தரை மைதானம் அல்ல; ஊக்கமும் உற்சாகமும் அளிக்கும் விசிறிகள் கூட ஏராளமாக இல்லை. கோச் மற்றும் மானேஜ ராக இருந்த ஜெய்தீப் முகர்ஜி யும், குடும்பத்தினரும், சில இந்தியர்களும் மட்டுமே, லியாண்டர் பெய்ஸை உற்சாகப்படுத்தி, அதிரடி ஆட்டம் ஆட வைத்தார் கள். இல்லை என்றால் உலக டென்னிஸ் ஆட்டக் காரர் வரிசையில் 127 ஆவது இடத்தில் இருந்த லியாண்டர் பெய்ஸ், விம் பிள்டன் மற்றும் யு.எஸ் ஓபன் டென்னிஸ் விருது கள் பெற்ற அகாஸியை எதிர்த்து ஆவேசமாக ஆட முடிந்திருக்குமா? அவரிடம் தோற்றுப் போனாலும், பெய்ஸின் உற்சாகம் குன்றவே இல்லை.

பிரேஸில் டென்னிஸ் வீரர் ஃபெர் னாண்டோ மெலி ஜெனி, ஸ்பெயின் வீரர் ஸெர்கி புரு கேராவிடம் தோற் றுப் போனதும், பெய்ஸ் மெலி ஜெனியை எதிர்த்து ஆட வேண்டி வந்தது - வெண்கலப் பதக்கத்தைப் பெறுவதற்காக.

பெய்ஸ் அதிக உயரம்கூட இல்லை. ஐந்தே முக்கால் அடிதான். 'சர்வ்' செய்வதிலும் அதிரடி வீச்சிலும் பெய்ஸ் பெயர் எடுத்த தில்லை. ஆனால் எதிராளியின் பந்தை எதிர் பார்த்துச் செயல்படும் வேகத்திலும், மன உறுதியிலும் மனிதர் கில்லாடி.

1990 ல் விம்பிள்டனில் ஜூனியர் சாம் பியனாகப் புகழ்பெற்ற பிறகு, முக்கியமான நூறு டென்னிஸ் வீரர்கள் வரிசைக்குள் நுழைந்துவிட பெய்ஸ் படாதபாடு பட்டார்.

விம்பிள்டனிலும் சரி, டேவிஸ்கப்பிலும் சரி, பணம் கொட்டும். ஒலிம்பிக்ஸில் பதக் கத்தோடு சரி. "என் நாட்டுக்காக நான் ஆடும் போது, வேறு எந்தப் பலனையும் நான் எதிர் பார்ப்பதில்லை. பெருமையும், புகழும் போதும்!" என்கிறார் லியாண்டர் பெய்ஸ்.

பெய்ஸின் அப்பா வேஸ் பெய்ஸ் கூட ஹாக்கி வீரர்தான். 72ல், மியூனிச்சில் நடந்த ஒலிம்பிக்ஸில் இந்தியாவுக்காக ஆடியவர். அப்போதும் இந்தியாவுக்கு ஹாக்கியில் வெண் கலப்பதக்கம்தான் கிடைத்தது! நாற்பது பேர் இந்தியா சார்பில் கலந்து கொண்டு, வெறுங் கையோடு திரும்பியதைப் பார்க்கும் போது, - அதுவும் ஐம்பதாவது சுதந்தர தினம் கொண்டாடும் இந்தப் பொன்விழா ஆண்டில் - பெய்ஸின் வெண்கலம் நமக்குத் தங்கத்துக்குச் சமா னம்!



- சித்தார்த்

படம் : சாரி

அட்டைவண்ணப்படம் - நன்றி : 'தி ஹிந்து'

## ஹலோ, சுகமா?

'மூக்கு' - அப்படீன்னதும் உங்களுக்கு ஞாபகம் வர்ற விஷயங்களையெல்லாம் ஒரு லிஸ்ட் எடுங்க...

மூக்குப் பொடி, இந்திரா காந்தி, ஸ்ரீதேவி, நாசர், நாக்கால மூக்கைத் தொட்ட யுவராணி. ஓகே?

எனக்கு, என்னோட கஸின் மாலுவோட ஞாபகம்தான் முதல்ல வரும். செக்கச் செவேல்னு, தளதளன்னு பழுத்த தக்காளிப் பழம் மாதிரி இருக்கும் அவ மூக்கு.

'அழுத கண்ணும் சிந்திய மூக்கும்'னு ஒரு பழமொழி சொல்வாங்களே - அதுக்கு நடமாடும் நிரந்தர உதாரணம் அவ. உலகத்துல மூக்கு சம்பந்தமா எந்த வியாதி புதுசா உற்பத்தி ஆனாலும் சரி; அத்தனையும் அவளை ஒரு நடை வந்து விசாரிச்சிட்டுப் போயிடும்.

நிரந்தர ஜலதோஷம், நிரந்தர டஸ்ட் அலர்ஜி, நிரந்தரத் தும்மல், நிரந்தர இர்ரிடேஷன்...

எப்பப் பாரு ஆக்டிஃபெட், ஸெலஸ்டமின் மாத்திரைகள், அமிர்தாஞ்சன், விக்ஸ் இன்ஹேலர்னு நடமாடும் மெடிக்கல் ஷாப்பா இருப்பா. நாட்டுல இருக்கற அத்தனை வகை மருத்துவமும் செஞ்சிப் பார்த்தாச்சு. நோ யூஸ். எல்லாம் தாற்காலிக நிவாரணத்துக்கு உதவிச்சே தவிர, நிரந்தரமா உபயோகமில்லை.

நாமெல்லாம் எயிட்ஸுக்கு மருந்து கண்டுபிடிக்காததைப் பத்தி மீட்டிங் போட்டுப் பேசிட்டிருக்கோம். நாட்டுல, ஜலதோஷத்துக்கு இன்னும் சரியான காரணமோ, மருந்தோ யாரும் கண்டுபிடிக்கலை தெரியுமா?

ஒருவித வைரஸ் இன்ஃபெக்ஷன்தான் ஜலதோஷத்துக்குக் காரணம். ஆனா அது என்ன வைரஸ், மாற்று மருந்து என்னன்னு இன்னும் கண்டுபிடிக்கலை! ஜலதோஷத்துக்குன்னு டாக்டர்கள் தர்ற மருந்தெல்லாம் பொதுவான ஆன்ட்டிபயாடிக்ஸ்தான்.

ஆனா, சில விஷயங்களை ரெகுலரா கடைப்பிடிச்சா இந்தத் தொந்தரவுகள் வராம தவிர்க்கலாம். (அது கூட ஒரு உத்தேசம்தான்.)

முதல் விஷயம் - நாம வசிக்கிற இடத்தை, குப்பை, அழுக்கு, ஒட்டடை, சாக்கடை சேராம வெச்சுக்கறது. எந்தக் கிருமியுமே சுலபமா நம்ம உடலுக்குள்ள நுழைய முடியும்னா, அதுக்கு சொர்க்க வாசல் மூக்குதான்! அதுக்குத்தானே மூடி கிடையாது!

ரெண்டாவது - ஒவ்வொருத்தர் உடலுக்கும் ஒரு குறிப்பிட்ட பொருள் ஒத்துக்காம இருக்கலாம். லே, தக்காளி சிலருக்கு ஆகாது. ஐஸ்கிரீம் சிலருக்கு ஒத்துக்காது. ஏன், எனக்குத் தெரிஞ்ச ஒருத்தர் டீ சாப்பிட்டாலே தும்ம ஆரம்பிச்சிடுவார்.

எந்தப் பொருள் நமக்கு இம்மீடியட்டா எதிர்ப்புத் தெரிவிக்கிறதுன்னு தெரிஞ்சிட்டு, அதைத் தவிர்த்துடறது நல்லது. (சிலருக்கு ஸ்வீட்ஸ் கூட அலர்ஜி ஏற்படுத்துவதுண்டு!)

முக்கியமான விஷயம், ஜலதோஷத்துக்கு மாத்திரைகள் யூஸ் பண்றதைக் கூடியமட்டும் அவாய்ட் பண்ணணும். பிராணாயாமம், யோகாவெல்லாம் தொடர்ந்து செய்யறவங்களைப் பாருங்க - ஃப்ரெஷ்ஷா இருப்பாங்க. அவங்களை விட அவங்க மூக்கு ரொம்ப ஃப்ரெஷ்ஷா இருக்கும்!

நிறைய பேர் வாரா வாரம் எண்ணெய் தேய்ச்சிக் குளிக்கிற வழக்கம் வெச்சிட்டிருக்காங்க. மருத்துவப்படி அதனால ஒண்ணும் உபயோகம் இல்லைன்னுதான் சொல்வோம். அது ஒரு பக்கம் இருக்கட்டும். அப்படி எண்ணெய் தேய்ச்சிக் குளிக்கறப்ப, ரெண்டு டிராப் நல்லெண்ணெயை மூக்கு துவாரங்களில் விட்டு, அண்ணாந்து படுத்துக்கங்க. ஜஸ்ட் ஒரு நிமிஷம். எண்ணெய், தொண்டைல இறங்கற வரைக்கும். இதனால என்ன உபயோகம்?

மூக்குலேருந்து கெட்ட வாடை வீசாது! குறிப்பா ஜலதோஷ காலங்கள்ல இது ரொம்ப உபயோகமா இருக்கும்.

நம்மை மாதிரி சாதாரண மக்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயம்தான். இருந்தாலும் இதைச் சொல்லாம இருக்க முடியறதில்லை.

சில நடிகைங்களெல்லாம் மூக்கு ஆபரேஷன் பண்ணிக்கறாங்க இல்லை? அது ரொம்பத் தப்பு!

ரெண்டு காரணம். ஒண்ணு, நம்ம உறுப்புகளிலேயே ரொம்ப சென்ஸிடிவான உறுப்புகளில் முக்கியமான ஒண்ணு மூக்கு. அதை ஆப்பரேட் பண்ணி ஷேப் மாத்தறதனால, திசுக்கள் ரொம்ப பாதிக்கப்படுது. சில திசுக்கள் இறந்தே விடுகின்றன!

இன்னொரு விஷயம் - அப்படி ஆப்பரேட் பண்ணி, ஷேப் மாத்தினாலும் அது அத்தோட முடியற விஷயம் இல்லை. சில வருஷங்களில் மூக்கோட ஷேப் மறுபடி 'ஒரு மாதிரி' ஆயிடும்! லோ, மறுபடி ஆப்பரேஷன்! இதெல்லாம் எதுக்குங்க?

- சுமி

# திருமுருகா

## ரியல் எஸ்டேட் – பைனான்ஸ் மற்றும் தொகுப்பு நிறுவனங்கள்

73, ரங்கநாதன் தெரு, வி.கே.கே. டிரேட் சென்டர், 2வது மாடி, தி. நகர்,
சென்னை-17. போன்: 4347833/6260079.

கிளை: H-58/59 South Extension Part I, P.S. House, புது டெல்லி - 110 049. போன்: 4644179.

ரூ.10,000/-
1 வருட டெபாசிட்
செய்பவர்களுக்கு சிறப்பு
ஊக்கத்தொகையாக (Incentive)
31.8.96 வரை
ஒரு கிராம் தங்க நாணயம்
(1gm Gold Coin)
வழங்கப்படும்.

ரூ.5000/-
ஒரு வருட
டெபாசிட்
செய்பவர்களுக்கு
ஒரு (Wall Clock)
சுவர் கடிகாரம்
வழங்கப்படும்.



| காலம் | குறைந்த பட்ச டெபாசிட் | வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 3 மாதம் | ரூ. 5000 | 24% | 2% |
| 6 மாதம் | ரூ. 5000 | 26% | 3% |
| 9 மாதம் | ரூ. 5000 | 28% | 4% |
| ஒரு ஆண்டும் அதற்கு மேலும் | ரூ. 5000 | 30% | 6% |

பொதுஜனம் : என்னையா செய்தி தாளை பிரித்தால் ஒரே பைனான்ஸ் கம்பெனி அட்வர்டைஸ்மென்டாக இருக்கு. இதிலே எவன் ஏமாற்றுக் காரன் எவன் நல்லவன் என்றே தெரியவில்லை. ஒரே குழப்பமா இருக்கு.

திருமுருகா : குழம்பாதிர்கள் சார். திருமுருகா இருக்கு சார். நீங்கள் டெபாசிட் செய்வதற்கு, பாதுகாப்பான நிறுவனம்.

ஏன் திருமுருகாவில் டெபாசிட் செய்ய வேண்டும்.

(1) திருமுருகா நிறுவனத்திற்கு கோடிக்கணக்கான சொத்துக்கள் உள்ளது.

(2) டிபாசிட்தாரர் என்று வேண்டுமானாலும் டிபாசிட் தொகையில் 75% உடனடி கடனாக பெறலாம். தவிர்க்க முடியாத காரணம் இருப்பின் டிபாசிட் முதிர்ச்சி ஆவதற்கு முன்பே ஊக்கத் தொகையை பிடித்துக்கொண்டு பணத்தை திருப்பி கொடுக்கிறோம்.

(3). 29.09.96 குலுக்கலில் உங்களுக்காக 50 பரிசுகள் காத்திருக்கிறது.

(4) திருமுருகா Fibre-Glass Industry, Heat Treatment Industry, Netlon Agency, வீட்டுமனை விற்பனை, லாபகரமாக நடக்கிறது.

(5) விருப்ப ஓய்வு பெற்ற அரசு அதிகாரியால் நடத்தப்படுகிறது.

***வீணை தனம்மாள் சங்கீத பாணியின் நிகரில்லா வாரிசாகத் திகழ்ந்த டி.பிருந்தா, சமீபத்தில் தமது 84வது வயதில் காலமானார். அமைதியும் ஆழமும் இசைச் செறிவும் நிறைந்த அந்த பாணி வெகுஜன ஆதரவைப் பெறவில்லை. ஆனால், பிருந்தாம்மாவின் இசை மட்டுமின்றி, அவருடைய சிந்தனைகளும் வாழ்க்கை முறையும்கூட மிக நவீனமாக அமைந்திருந்தன என்று ஆச்சர்யப்படுகிறார் அவருடைய இருபத்திமூன்று வயது மாணவி கிர்ணாவளி.***

# பிருந்தாம்மா

மிகப் பிற்போக்கான ஒரு காலகட்டத்தில் பிறந்தபோதும், அவரது பாட்டி வீணை தனம்மாளின் கட்டுபாட்டை மீறி, நாயினா பிள்ளையிடம் இசைப் பயிற்சிக்கு அனுப்பி வைக்கப்பட்டார் பிருந்தாம்மா. அப்படி அவரை அனுப்பி வைக்கும் துணிவும் தீர்க்க தரிசனமும் அவருடைய தாயார் காமாக்ஷி அம்மாளுக்கு இருந்தது. ஒன்பது வயதுப் பெண் குழந்தையை இப்படி குருகுல வாசத்துக்கு அனுப்பி வைப்பது அந்த நாளில் எண்ணிப் பார்க்க முடியாத ஒரு புரட்சி! ஆனால் நான்கைந்து வருடங்களுக்குத்தான் அந்த பயிற்சி நீடித்தது. அதன் பிறகு வீடு திரும்பி தொடர்ந்து அம்மாவிடமும் பாட்டியிடமுமே கற்றுக் கொண்டார்.



காமாக்ஷி அம்மாளின் கலையுணர்வும் நெஞ்சுரமும் சரியான கலவையில் அவரது மகளுக்கும் வாய்த்தது. கச்சேரி வாய்ப்புகள் அதிகரிக்க வேண்டும் என்பதற்காகவோ, ரசிகர்கள் கூட்டம் அதிகரிக்க வேண்டும் என்பதற்காகவோ அவர் தமது பாணியை மாற்றிக் கொண்டதேயில்லை என்பது இசை வட்டங்களில் எல்லோருக்கும் தெரிந்ததுதான். ஆனால் அந்த உறுதி எத்தனை ஆழமான நம்பிக்கையின் அடிப்படையில் உருவானது என்பது அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்குத்தான் புரியும். தமக்கு வாய்த்த பாரம்பரியத்திலிருந்து துளியும் விலகக் கூடாது என்ற உறுதி மட்டுமில்லை. "முன்னோர்கள் வகுத்த நெறிகளையும் இசை அமைப்புகளையும் மாற்ற நமக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?'' என்று அடிக்கடி உணர்ச்சிவசப்பட்டுக் கேட்பார்.

இதயத்துள் ஊடுருவி, அப்படியே உள்ளத்தை உருக்கிவிடும் ஆற்றல் அவர் இசைக்கு உண்டு. சமீபத்தில் என் அண்ணாவின் (ரவிகிரண்) கல்யாணத்தில் அவர் பாடியபோது, இளைய தலைமுறையினர் பலர் அசந்து போனார்கள்.

மேலும், அந்த பாணியின் நிதானம் என்பது துரிதமாகப் பாட இயலாததால் ஏற்பட்டது அல்ல! சில சமயம் நான் காலப் பிரமாணம் மீறி வேகமாகப் பாடினால், பிருந்தாம்மா என்ன சொல்லுவார் தெரியுமா..?

"ஓடாதே! உன்னைவிட வேகமா ஒரு காலத்துல நான் ஓடினேன். வேகம் வசப்படணும், ஆனால் நிதானம்தான் பாட்டுக்கு லட்சணம்'' என்பார்.

மற்ற பாணிகளை அவர் புறக்கணித்தார் என்று சொல்ல முடியாது. ஆத்மார்த்தமும் நேர்மையும் வாய்ந்த எல்லா பாணிகளையும் ஏற்றார். அவை அமையப்பெறாத நிலையில் தமது கருத்து கேட்கப்பட்டால் வெளிப்படையாகவே சொல்லி விடுவார்!

வாழ்க்கையை மிகவும் நேசித்து, ஆக்கபூர்வமாய் அணுகினார். அதனால் தான் ஒற்றை மனுஷியாகப் பாடுபட்டு குடும்பத்தைப் பராமரித்து, சொந்த வீடும் கட்டிக் கொள்ள அவரால் முடிந்தது.

பெண்கள் சுயச்சார்புடன் இருப்பதை இன்றளவும் முழுமனத்துடன் உலகம் ஏற்காத நிலையில், அவர் இத்தனை துணிவுடன் செயல்பட்டது வியப்பான விஷயம். உள்ளத்தால் அவர் பெண்ணியவாதியல்லவென்றாலும், இன்று பெண்ணியக் கொள்கைகளாக முழங்கப்படுகிறவற்றை ஆர்ப்பாட்டமில்லாமல் கடைப் பிடித்தார்.

அரசியலில் நிரம்ப ஆர்வம். பேப்பரை விடாமல் படித்துவிடுவார். உடையிலும் தோற்றத்திலும் எளிமையைக் கடைப்பிடித்தார். ஒப்பனைகளில் நம்பிக்கை கிடையாது. ஆனால், அதே சமயத்தில் இளைய தலைமுறையினரின் நவீன உடைகளையும் வெகு இயல்பாக முகம் சுளிக்காமல் ஏற்றுக் கொண்டார்.

ஏதாவது சரியாக வராமல் போய் நான் சலித்துக் கொண்டால், "அப்படிச் சொல்லவே சொல்லாதே... உனக்கு வரும், கட்டாயம் வரும், நீ சின்னப் பொண்ணு தானே...'' என்று ஊக்கப்படுத்தி திசை திருப்புவார்.

என்னைப் போன்ற மாணவர்களையும் உள்ளடக்கியதாகவே அவருடைய எதிர்காலக் கனவுகள் அமைந்திருந்தன. "உனக்குக் கல்யாணமாகி நான் பார்க்க வேண்டாமா?'' என்பார். மரணத்தைப் பற்றிய சிந்தனையோ அவநம்பிக்கையான பேச்சோ அவரிடமிருந்து வெளிப்பட்டு நான் கேட்டதேயில்லை!



# பத்துக் கிலோவுக்கு ஒன்பது கிலோ அரிசி;

"உங்கள் துறையைச் சேர்ந்த ஏதாவது சில இடங்களுக்குத் திடீர் விசிட் செய்து, அங்கே என்னவெல்லாம் நடக்கிறது என்று பார்க்கலாமா?"- உணவு அமைச்சர் கே. என். நேருவிடம் கேட்டோம்.

"ஓ! தாராளமாகப் பார்க்கலாம். வட சென்னை - மிண்டில் உள்ள சிவில் சப்ளைஸ் குடோனில் தவறுகள் நடப்பதாக எனக்கும் சில புகார்கள் வந்திருக்கின்றன. முதலில் அங்கு போகலாம்!" என்றார் அமைச்சர்.

உடனடியாக, சிவில் சப்ளைஸின் சேர்மன் மற்றும் மானேஜிங் டைரக்டர் என்.பி. குப்தாவை டெலிபோனில் அழைத்தார். "கல்கி பத்திரிகையிலிருந்து வந்திருக்கிறார்கள். எங்காவது திடீர் விசிட் செய்ய வேண்டும் என்கிறார்கள். உடனே வாருங்கள்!" என்றார்.

அவரோடு, கமிஷனர் எம்.வி. ராமு, சீனியர் ரீஜனல் மானேஜர் மற்றும் சில அதிகாரிகளும் வந்தார்கள். நாள் : 8.8.96. பிற்பகல் இரண்டரை மணி.

"மிண்ட் குடோனுக்குப் போகலாமா?" - அமைச்சர் கேட்டார்.

"இந்நேரம் போவதை விட காலை வேளையில் போனால் நன்றாக இருக்குமே!" என்றார் சேர்மன் குப்தா.

"பரவாயில்லை. இப்போதே போகலாம் வாருங்கள்!" என்று புறப்பட்டார் அமைச்சர்.

**களத்தில் கல்கி :**

மிண்ட் குடோனுக்குள் நாங்கள் நுழைந்தபோது, அரிசி மூட்டைகளை ஏற்றிக் கொண்டு புறப்படத் தயாராயிருந்த லாரிகளையெல்லாம் நிறுத்தச் சொல்லிவிட்டு, குடோனுக்குள் நுழைந்தார் அமைச்சர். அங்கே இன்னொரு வாகனத்தில்

அமைச்சர் கே.என். நேரு





• உதவி மானேஜர் புவனேந்திரனுக்கு எச்சரிக்கை..




ஏற்றப்பட்டுக் கொண்டிருந்த அரிசி மூட்டைகளை எடை போடச் சொன்னார்.

முதலில் எடைபோடப்பட்ட மூட்டையில் இருநூறு கிராம் அரிசி தான் எடை குறைவாக இருந்தது. அடுத்து போடப்பட்ட மூட்டையில் இருநூறு கிராம் அதிக எடை இருந்தது.

"இப்படியெல்லாம் இருக்க முடியாதே... இனி நான் சொல்கிற மூட்டைகளைக் கொண்டு வந்து எடை போடுங்கள்!" என்ற அமைச்சர், அவரே ஒரு மூட்டையைச் சுட்டிக்காட்டினார்.

அதைக் கொண்டு வந்து எடை போட்டபோது, மூன்று கிலோ எடை குறைவாக இருந்தது. அதாவது 101 கிலோ இருக்க வேண்டிய எடை 98 கிலோதான் இருந்தது!

"அதானே பார்த்தேன்..." என்ற அமைச்சர் மறுபடியும் சில மூட்டைகளைச் சுட்டிக் காட்டினார்.

அவையும் எடை போடப்பட்டபோது, இரண்டு கிலோ, மூன்று கிலோ என்று எடை குறைவாகவே இருந்தன.

அரிசியை எடை போட்டு மூட்டைகளாகக் கட்டி, வாகனங்களில் ஏற்றி – இறக்குகிற தொழிலாளர்களின் மேஸ்திரியான ராமச்

# பத்து லிட்டருக்கு ஏழு லிட்டர் கெரஸின்!

## - உணவு அமைச்சருடன் ஓர் அதிரடி விசிட்!

## எறும்பார் கடிக்கிறார்!

''அதிகாரிகள், அமைச்சர்கள் தமிழில்தான் கையெழுத்துப் போட வேண்டும்.''

– தமிழ்க்குடிமகன்




சந்திரய்யாவை அழைத்தார் அமைச்சர்.

''இப்படியெல்லாம் எடை குறைவாகப் போடச் சொன்னது யார்? என்னிடம் சொல்லு...''

''இல்லை சார்... ஏதோ தெரியாமல் இப்படி நடந்து விட்டது... இனி நடக்காது சார்...''

''இது மாதிரி தவறுகள் செய்தால் என்னிட மிருந்து உங்களைக் காப்பாற்ற யார் வந்தா லும் நடக்காது. தொலைத்து விடுவேன் தொலைத்து... ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? இந்த வண்டியில் ஏற்றப்பட்ட அத்தனை மூட் டைகளையும் இறக்கி, மறுபடியும் சரியாக எடை போட்டு அனுப்புங்கள்!'' என்ற அமைச் சர், குடோனின் உதவி மானேஜர் புவனேந் திரனை அழைத்தார்.

''இப்படி மூட்டைகளில் எடை குறைவாக இருக்கிறதே... இதையெல்லாம் நீங்கள்தானே கவனிக்க வேண்டும். இதில் எல்லோருக்கும் பங்கா?''

''இல்லை சார், எனக்குத் தெரியாமல் நடந்து விட்டது சார்...''

''நீங்கள்தானே இதற்குப் பொறுப்பு. எப்படித் தெரியாமல் நடக்கும்?'' என்று கோபத்தோடு கேட்ட அமைச்சர், கூட வந்தி ருந்த அதிகாரிகளிடம், ''குடோனில் அடுக்கி வைக்கப்பட்டுள்ள மூட்டைகளையெல்லாம் எண்ணி, ஸ்டாக் சரியாக இருக்கிறதா என்று சரிபாருங்கள்!'' என்றார்.

சுமார் ஒரு மணி நேரம் எண்ணி ஸ்டாக்கு களைச் சரிபார்த்த போது இருபத்திரண்டு மூட்டைகள் ஸ்டாக்குக்கு மேல் அதிகமாக இருப்பதாகச் சொன்னார்கள்.

''பார்த்தீர்களா? அங்கே எடை குறைவாக இருந்தது. அனுப்பப்பட்ட மூட்டைகளில் எடை குறைவான அரிசியெல்லாம் சேர்ந்து, இப்படி இருபத்திரண்டு மூட்டைகளாக இங்கே அதிகமாக இருக்கிறது. இது தனியாக விற்பனை செய்யப்படும். இதில் சப்ஜாடாக அனைவருக்குமே பங்கு. இதுதான் பல காலமாக நடந்து கொண்டிருக்கிறது. இங்கே...'' நம்மிடம் விளக்கினார் அமைச்சர்.

''என்ன செய்யலாம்?'' உடன் வந்த அதிகாரிகளிடம் கேட்டார் அமைச்சர்.

''உடனே சஸ்பெண்ட் செய்யலாம்!'' என்றார்கள் அவர்கள்.

''சார், தொழிலாளர்கள் இப்படிச் செய் கிறார்கள். நான் என்ன சார் செய்ய முடியும்?'' உதவி மானேஜர் புவனேந்திரன் பரிதாபமாகக் கேட்டார்.

''அதெப்படி அவர்கள் செய்வார்கள்? இப் படித்தான் அவர்கள் செய்வார்கள் என்றால், உதவி மானேஜராக நீங்கள் எதற்காக இங்கே இருக்க வேண்டும்? உங்களுக்குத் தெரியாமல் இங்கே எதுவுமே நடக்க முடியாது. நீங்கள் சரியாக இருந்தால் தவறே நடக்க முடியாது. உதாரணத்திற்கு, நான் லஞ்சம் வாங்கினால், எனக்குக் கீழுள்ள சேர்மன் என்ன செய்வார்? அமைச்சரே வாங்கும்போது நமக்கு மாத்திரம் என்ன? நாம் வாங்கினால் அமைச்சரால் எப் படித் தட்டிக் கேட்க முடியும் என்று அவரும் வாங்கத்தான் செய்வார். ஆனால் நான் யோக் கியமாக இருந்தால், அவரும் யோக்கிய மாகத்தான் இருந்தாக வேண்டும். ஆக, நீங்கள் சரியானபடி இருந்திருந்தால் இந்தத் தவறுகள் நடந்திருக்கவே முடியாது. இது என்னை மட்டும் ஏமாற்றுகிற விஷயமில்லை. ஒட்டு மொத்த மக்களையும் ஏமாற்றுகிற விஷயம்!'' என்ற அமைச்சர் உடன் வந்த அதிகாரி களிடம், ''இதற்கு என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்யுங்கள்!'' என்றார்.

உடன் வந்த அதிகாரிகள் அந்த குடோன் சம்பந்தப்பட்ட ரெகார்டுகளையெல்லாம் எடுத் துக் கொண்டு வந்தார்கள்.

''இந்நேரம் வெளியிலுள்ள அனைவருக்கும் செய்திகள் பறந்திருக்கும். சம்பந்தப்பட்ட அனைவரும் இப்போது உஷாராகியிருப் பார்கள். எனவே, நாம் இனி என்ன செய்ய லாம்?'' நம்மிடம் கேட்டார் அமைச்சர்.

''ரேஷன் கடைகளுக்கெல்லாம் டெலி போன் இல்லை. அதனால் ஏதாவதொரு ரேஷன் கடைக்குச் சென்று பார்க்கலாமே!'' என்றோம்.

''சரி, போவோம்!'' என்றார் அமைச்சர்.

வடசென்னையிலேயே உள்ள எஸ்.பி. கோயில் தெரு என்று அழைக்கப்படும் செங் கழனி பிள்ளையார் கோயில் தெருவிலிருக்கும்

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை இலவச சேவை

அனைத்து சமூகத்திலும், ஆயிரக்கணக்கான வரன்கள் பெற உடன் பதிவுசெய்ய தொடர்பு கொள்ளவும்.



**BEST BRIDE & GROOM BANK™**

H.O.: 3rd Floor, Shanthi Complex,
26, Ranganathan Street,
Madras - 600 017.
Phone : 4348560 4347025

B.O.: 13, College Road,
Nanganallur, Madras - 114.
7, Station Road, Tambaram Sanatorium,
Madras - 600 047.
5, Second Main Road,
New Colony,
Chromepet,
Madras - 600 044.

Working on Sundays also



## வைத்யம் பர்வதா சில்க்ஸ்

தரமான மதுரை சுங்குடி புடைவை தயாரிப்பாளர்கள்

உறுதியான சாயம்! தரத்தின் உறைவிடம்!

தயாரிப்பாளரின் நேரடி விற்பனை நிலையம்

*1, வடக்கு மாடவீதி,*
*மைலாப்பூர், சென்னை - 600 004.*
**போன் : 495 3264**

**விலையோ மலிவு தரமோ நிறைவு**

வீட்டில் இருந்தே வியாபாரம் செய்யும் விற்பனையாளர்கள் வரவேற்கப்படுகிறார்கள்.

## மீராவின் வைப்பு நிதித் திட்டம்

இன்றே ரூ. 1000 Deposit செய்து அதற்கு நிகராக எங்கள் show room-லிருந்து சூரத் சாரிகள், பெங்கால் காட்டன், காஞ்சிபுரம் பட்டு, மைசூர் சில்க், கோரா காட்டன், சுங்குடி சேலைகள் மற்றும் சுடிதார் பிளவுஸ் ஆகிய அனைத்தையும் விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் நீங்கள் Deposit செய்த தொகையை 46 மாதங்களில் இரண்டு மடங்காக பெறலாம். அதுவரை எங்களிடமிருந்து புடைவைகளை விற்பனைக்கு எடுத்துச் செல்லலாம். மேலும் விவரங்களுக்கு,

**மீரா டெக்ஸ்டைல்ஸ்**

*26/1, மோதிலால் தெரு, தி.நகர்,*
*சென்னை - 600 017.*
*போன் : 4342696*

Authorised Dealers :
WIMCO FABRICS - SURAT

## உங்கள் கவனத்திற்கு

உங்களுக்கு பிரச்னையா, சரியாக கட்டப்படாத வீடு, பாதி கட்டப்படாத வீடு, பிரச்னை உள்ள வீடு, சதா வியாகூலம், சண்டை, சச்சரவுகள் உள்ள வீடு, மந்தமான திருஷ்டி ஏவல் சேஷ்டையுள்ள, வியாபாரஸ்தலம் இவைகளுக்கு உடன் பலன் அளிக்கவல்ல "அர்த்தமேரு" பெறலாம். அனைத்து ரக்ஷை, எந்த்ரம் சம்பந்தப்பட்ட கேட்லாக் பெற ரூ. 2 ஸ்டாம்புடன் தொடர்பு கொள்க. பிரதி பௌர்ணமியும், வெள்ளிக்கிழமைகளிலும் இலவச அருள்வாக்கு காலை 11 மணிக்கு நடை பெறும்.

| | |
|---|---|
| அர்த்தமேரு பீடம் | ரூ. 340.00 |
| தனாகர்ஷண எந்த்ரம் | ரூ. 375.00 |
| மஹா சுதர்ஸன எந்த்ரம் | ரூ. 380.00 |
| ஹனுமத் ரக்ஷை | ரூ. 25.00 |
| குபேர தனாகர்ஷினி மூலிகை | ரூ. 25.00 |
| மஹா வசீகர்ண ஹனுமத் அஞ்சன | ரூ. 61.00 |

மற்றும் பல அபூர்வ தெய்வீக சாதனங்களைப் பற்றி அறிய தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

**ஹனுமத் தாஸர்**

Prof. K.G.B. Chariar, M.M.H & SCA
No. 16, 10th Street, Shanthi Nagar,
Adambakkam, Madras - 600 088.
Phone No: 2332881

# KALKI SHOPPING PAGE

அமுதம் சில்லறை விற்பனை அங்காடிக்குச் சென்றோம்.

ரேஷன் பொருள்களை வாங்குவதற்காக ஏகப்பட்ட பெண்கள் கியூவில் நின்றிருந் தார்கள். நேராக உள்ளே சென்றோம்.

கியூவை விலக்கிக் கொண்டு உள்ளே போகும்போது, கஸ்தூரி என்ற பெண்மணி அரிசி வாங்கிக் கொண்டு வெளியே வந்து கொண்டிருந்தார். அந்தப் பெண்மணியின் கையிலிருந்த அரிசி மூட்டையை வாங்கிக் கொண்டு எடை போடும் இடத்திற்குச் சென்றார் அமைச்சர்.

அரிசியைத் தராசில் கொட்டிய அமைச்சர், அந்தப் பெண்மணியிடமிருந்த பில்லை வாங்கிப் பார்த்தார். அதில் பத்துக் கிலோ அரிசி வாங்கியதாக எழுதப்பட்டிருந்தது. எடை போட்டுப் பார்த்ததில் ஒன்பது கிலோ தான் இருந்தது!

எடை போட்டுத் தந்த முனுசாமி என்ற ஊழியரை அழைத்தார் அமைச்சர். ''என் னய்யா இது...?''– கேட்டார்.

''சார்... நான் பார்ட்டி மெம்பர் சார்... இதோ உறுப்பினர் கார்டு...'' என்று, தாம் தி.மு.க.வின் உறுப்பினர் என்பதை நிரூபிக்க அட்டையை எடுத்துக் காண்பித்தார் முனு சாமி.

அமைச்சரின் முகம் ஜிவ்வென்று கோபத் தில் சிவந்து விட்டது. ''ஏய்யா... செய்யறது தப்பு! அதுக்குக் கட்சிக்காரன்னு வேற சொல்லி கட்சிப் பேரையே கெடுக்கப் பார்க்கிறியா? நீ பண்ற தப்பால ஜனங்க என்ன சொல்லுவாங்க? 'கருணாநிதி ஆட்சி சரியில் லே'ன்னு சொல்லுவாங்க. தலைவருக் கில்லையா கெட்ட பேரு. இப்படியெல்லாம் செஞ்சா தொலைச்சிடுவேன் தொலைச்சு. நீ பண்ற தப்புக்குக் கட்சியை சப்போர்டுக்குக் கூப்பிடாதே... தெரியுதா?''

கோபம் தணியாமல் வெளியே வந்த அமைச்சர், கெரஸின் வழங்கப்பட்ட இடத்தி லும் சோதனையிட்டார்.

பத்து லிட்டர் என்று சொல்லி வாங்கிச் சென்ற ஒரு பெண்மணியின் கெரஸின் கேனை வாங்கி, மறுபடியும் அளந்து பார்த்தபோது, ஏழு லிட்டர்தான் இருந்தது!

இப்படி நாங்கள் மறுபடியும் கெரஸினை அளந்து பார்ப்பதற்குள், மக்களுக்குக் கெரஸின் அளந்து ஊற்றிக் கொண்டிருந்த ராதாகிருஷ் ணன் என்ற ஊழியர் எங்கோ ஓடிப் போய் தலைமறைவாகி விட்டார். எங்கு தேடியும் கிடைக்கவில்லை!

''என்ன, எல்லோரும் கூட்டுக் கொள் ளையா?'' – அந்த அமுதம் சில்லறை விற்பனை அங்காடியின் பொறுப்பாளர் சுரேஷிடம் விசாரித்த அமைச்சர், கூட வந்திருந்த அதிகாரி களிடம், ''நீங்கள் அனைவரும் இங்கே இருந்து, இருக்கிற பொருள்களையெல்லாம் கார்டுதாரர் களுக்கு விநியோகம் செய்து முடித்துவிட்டு, இந்தக் கடையிலுள்ள அத்தனை ஊழியர் களையும் சஸ்பெண்ட் செய்துவிட்டு வாருங் கள்!'' என்று உத்தரவிட்டார்.

நம்மிடம், ''சரி, வாருங்கள், வீட்டுக்குப் போய்ப் பேசுவோம்!'' என்றார் அமைச்சர்.

''நீங்களே கண்கூடாகப் பார்த்தீர்களே... இந்தத் துறையில் ஊழல் என்பது எப்படி யெல்லாம் அடிமட்டம் வரை புரையோடிக் கிடக்கிறது என்பதை! நான் மாத்திரம் கொஞ் சம் நீக்குப்போக்காக நடந்து கொண்டால் போதும்... பணமாகக் கொண்டு வந்து கொட்டி விடுவார்கள். அப்படித்தான் இதுவரை நடந்து கொண்டிருந்திருக்கிறது. அதைச் சீர்செய்ய



''சவுதி அரேபியாவில பொறந்து வளர்ந்த பொண்ணைக் கல்யாணம் செய்தது தப்பாப்போச்சு!''

''ஏன்?''

''காலையிலே குடிக்க ஒட்டகப் பால் கொண்டான்னு அடம் பிடிக்கிறா?''

– ஈ.டி.விஜயகுமார்

வேண்டிய மிகப் பெரிய பொறுப்பாக இந்தத் துறையை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார், தலைவர் கலைஞர்'' என்று அமைச்சரே பேச்சைத் துவக்கினார்.

''கடந்த இரண்டு மூன்று மாதங்களில் நீங்கள் என்ன நடவடிக்கை எடுத்திருக் கிறீர்கள்?''

''முதலில் போலி ரேஷன் கார்டுகளை ஒழிக்க ஆரம்பித்தோம். கடந்த ஆட்சியில் ஆந்திராவிலிருந்து வாங்கப்பட்ட அரிசிக்கான விலை டன் ஒன்றுக்கு எட்டாயிரத்து ஐநூறு ரூபாய். இப்போது அதே அரிசியை டன் ஒன்றுக்கு 7,500 ரூபாய் விலை கொடுத்து வாங்க ஆரம்பித்துள்ளோம். கடந்த ஆட்சியில் இடைப்பட்ட ஆயிரம் ரூபாய் என்னவாகி யிருக்கும் என்பது பற்றி நான் உங்களுக்குச்

# பாசனத்துக்கு ஒரு நிரந்தரத் திட்டம்!



'நம்மால் முடியும் தம்பி!' என்று எந்த விஷயத்தையும் 'பாஸிடிவ்' வாக எடுத்துக் கொள்ளத் தூண்டும் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தியோடு, இப்போது கைகோத்துக் கொண்டு உற்சாகம் கொடுக்க முன் வந்திருக்கிறார் சி. சுப்பிரமணியம். முன்பு மாநில-மத்திய அமைச்சர், மாநில ஆளுநர் என்று, பதவிகளை ஏற்றபோது எந்த அளவுக்கு ஆர்வத்துடன் செயலாற்றினாரோ, அதே ஆர்வத்தோடு இருக்கிறார்.

''தென்னக நதிகளை இணைத்து, அதன் மூலம் பரஸ்பரம் மாநிலங்கள் பயன் அடைய முடியும்!'' என்று அடித்துச் சொல்லுகிறார் டாக்டர் உதயமூர்த்தி.



'5 டி.எம்.சி. கொடுங்கள், 10 டி.எம்.சி. கொடுங்கள்' என்று அண்டை மாநிலத்திடம் கையேந்தி நிற்கும் நிலையில், மகாநதியிலிருந்தும், கோதாவரியிலிருந்தும் ஆயிரக்கணக்கான டி.எம்.சி. தண்ணீர் வருடா வருடம் கடலில் கலக்கவிடப்படுகிற அவலத்தைச் சுட்டிக்காட்டுகிறார் உதயமூர்த்தி. ''ஆயிரக்கணக்கான ஏக்கர் பாசனத்துக்கு இந்தத் தண்ணீர் உதவும். மகாநதியை கோதாவரியுடன் இணைத்து, பிறகு கிருஷ்ணா, வடபெண்ணையாறு, பாலாறு, தென்பெண்ணையாறு, காவிரி, வைகை என்று இணைத்து விட்டால், தங்கு தடையின்றித் தண்ணீர் கிடைக்கும்!'' என்கிறார்.

''நீர்ப்பாசனத்துக்கு மட்டுமல்ல, மிகக் குறைந்த செலவில் போக்கு வரத்துக்கும் இந் நதிகள் பயன்படும்.''

''அரசியல்வாதிகள் தாம், தம் சொந்த விருப்பு வெறுப்புகளை இதில் கலந்து பிரச்னை ஆக்கிவிடுகிறார்கள். மக்களிடம் இதை எடுத்துச் சென்றால் அவர்களின் ஆதரவு நிச்சயம் நமக்குக் கிடைக்கும்'' என்கிறார் சி.எஸ்.

ஆனால் செலவழிக்க வேண்டியது என்னவோ அரசுகள்தானே? 90ல் போட்ட எஸ்ட்டிமேட்படி 20,000 கோடி ரூபாய். தற்போதைய நிலவரப்படி 65,000 கோடி ரூபாயாம்! ''ஆனால் இதன் பலனாக வருடத்துக்கு 10,500 கோடி ரூபாய் நலன் கிடைக்கும்!'' என்கிறார் சி.எஸ்.

- சாருகேசி.

சொல்லவே தேவையில்லை! இப்படி அரிசியை முறையாக வாங்க ஆரம்பித்ததன் மூலமும் போலி ரேஷன் கார்டுகளை ஒழித்ததன் மூலமும் மட்டுமே இப்போது மாதம் ஒன்றுக்குப் பதினாறு கோடி ரூபாய் அரசுக்கு மிச்சமாக ஆரம்பித்திருக்கிறது. இன்னும் ஆறு மாத காலத்தில் இன்னும் நிறைய விஷயங்களைச் சரிப்படுத்தவும் நெறிப்படுத்தவும் முடியும் என்று நம்புகிறேன்!''

''இப்போது நாம் பார்த்த இடங்களில் அரிசி நல்லபடியாகத்தான் இருந்தது. ஆனால் சில ரேஷன் கடைகளில் வழங்கப்படும் அரிசி ஒரே நாற்ற மடிக்கும். அரிசியைக் கையில் எடுத்தாலே, கையிலெல்லாம் ஒரே மாவாக ஒட்டிக் கொள்ளும். அது ஏன்?''

''குடோன்களில் மூட்டைகள் அடுக்கி வைக்கப்பட்டிருப்பதில் சில சமயங்களில் சில மூட்டைகள் நீண்ட காலமாக அந்த குடோனிலேயே இருந்து விடும். அதனால் அந்த அரிசி கெட்டு விடும். அப்படிப்பட்ட அரிசி மூட்டைகள் சில கடைகளுக்கு வந்து சேர்ந்து விடும். அப்படி வருகிறபோது, சம்பந்தப்பட்ட கடை ஊழியர்கள் அதைத் திருப்பி அனுப்பி விடலாம். ஆனால் சிலர் அப்படிச் செய்ய மாட்டார்கள். உதாரணத்திற்கு என் தொகுதியையே எடுத்துக் கொள்ளுங்களேன். தொகுதி மக்களுக்கு நன்றி சொல்வதற்காகச் சென்றிருந்தேன். அப்போது ஒரு ரேஷன் கடையில் நீங்கள் சொல்வது போன்ற அரிசிதான் வழங்கப்பட்டுக் கொண்டிருந்தது. காரணம் அந்தக் கடை ஊழியர். ''கருணாநிதிக்கு ஓட்டுப் போட்டீங்கல்ல... அனுபவிங்க...'' என்று சொல்லியே, ஊழியர் அந்த அரிசியை மக்களுக்கு வழங்கிக் கொண்டிருந்தார்! நான் இதைக் கேள்விப்பட்டதும் உடனடியாகப் போய் நடவடிக்கை எடுத்தேன். ஒரு சாதாரண ஊழியர் கூட ஓர் அரசுக்குக் கெட்ட பெயர் சம்பாதித்துத் தர முடியும் என்பதற்கு அதுவோர் மிகச் சிறந்த உதாரணம்!''

''இப்படிப்பட்டதொரு முக்கியமான உணவுத் துறையை உங்களிடம் முதல்வர் கொடுத்ததற்கு என்ன காரணம்?''

''தலைவர் கலைஞருக்குத்தான் தெரியும். ஆனால் ஒன்று. எங்களிடம் பொறுப்புகளை ஒப்படைத்த தலைவர், எங்களையெல்லாம் அழைத்து, 'ஓர் ஆட்சி எப்படியெல்லாம் நடக்கக்கூடாது என்பதற்குச் சென்ற ஆட்சி ஓர் உதாரணம். ஓர் ஆட்சி எப்படியெல்லாம் நடக்க வேண்டும் என்பதற்கு நமது ஆட்சி ஓர் உதாரணமாக இருக்க வேண்டும். அதன்படி எல்லோரும் நடந்து கொள்ளுங்கள்!' என்றார். தலைவர் கலைஞரின் இந்த எதிர்பார்ப்பை நிச்சயமாக நான் நிறைவேற்றுவேன் என்பதை மட்டும் உறுதியாகச் சொல்கிறேன்!'' என்றார் அமைச்சர் கே.என். நேரு.

- இளங்கோவன், ஸ்ரீநிவாசன்

வண்ணப்படங்கள் : பேஜர் கே. மூர்த்தி

## வாரம் ஒரு போட்டி - 3

## பரிசு ரூ. 5000!

இங்குள்ள இரண்டு படங்களையும் உற்றுப் பாருங்கள். இரண்டு படங்களுக்கும் குறைந்த பட்சம் 12 வித்தியாசங்கள் இருக்கின்றன. பன்னிரண்டையும் சரியாகக் கண்டு பிடித்துக் கீழுள்ள கூப்பனில் எழுதியனுப்புங்கள். சரியாக எழுதுபவருக்குப் பரிசு ரூ.5000. பலர் சரியாக எழுதினால் குலுக்கல்தான். ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

முடிவு தேதி: 26.8.96

### ஜாலி போட்டி - 3

கண்டு பிடித்த வித்தியாசம்:

1.................... 2....................

3.................... 4....................

5.................... 6....................

7.................... 8....................

9.................... 10....................

11.................... 12....................

என் பெயர் :....................

முகவரி :....................

....................





# தமிழ்ச்செல்வன்



ஒரு நேர்மையான ஐ.ஏ.எஸ். அதிகாரிக்கு அரசியல்வாதிகள் தருகிற தொல்லைகள் எப்படியெல்லாம் இருக்கும்?

குடும்ப சகிதமாக காரில் போய்க் கொண்டிருக்கிற போது, ஆட்டோவில் வந்து அழகு மனைவி மேல் ஆஸிட் வீசி விடுவார்கள். நேர்மையாகச் சிலபல சீர்திருத்தங்கள் செய்தால், மாவட்டம் மாவட்டமாக டிரான்ஸ்ஃபர் பண்ணி விடுவார்கள். வீட்டுக்கு பாம் அனுப்பி, அப்பாவைக் கொன்று விடுவார்கள். குண்டர்களை அனுப்பி சண்டை போடச் செய்வார்கள். கலெக்டரின் ஃபைல்களிலிருந்து தாள்களை உருவி கப்பல் செய்து மிதக்க விடுவார்கள்.

இதனாலெல்லாம் மேற்படி ஐ.ஏ.எஸ். நேர்மையாளர் கொதிப்படைந்து, கத்தி அல்லது துப்பாக்கி தூக்கி, தீயவர்களை அழிப்பார் என்று நீங்கள் சொல்லி விடுவீர்கள். நாமும் அப்படியே எதிர்பார்க்க, வணக்கம் போடுகிற வரை அகிம்சை கடைப்பிடிக்கிறார் விஜயகாந்த். இது முதல் வித்தியாசம்.

ஒரு முழு மசாலா மைதானத்தில் கூடிய வரை சிவப்பு, நீலம், பச்சை வண்ணங்களைத் தவிர்த்து, அரசியல்வாதிகளிடம் நேர்மை மாட்டிக் கொண்டு படும்பாட்டை யோக்கியமாக, கூடிய வரை மிகைப்படுத்தாமல் சொல்லியிருக்கிறார் இயக்குநர். இது இரண்டாவது.

மூன்றாவது வித்தியாசத்தைக் காட்டியிருப்பவர் தேவா. ஒரு மில்லி மீட்டர் கூட சோடை போகாத ரீ-ரெக்கார்டிங். பல இடங்களில் வசனங்களால் நிரப்ப முடியாத சமாசாரங்களை வயலினால் அநாயாசமாக நிரப்பிப் போகிறார்.

சமீப காலமாக பாரதிராஜா படங்களில் தெரிய ஆரம்பித்திருக்கிற மாறுதல்கள், அவரது டிரேட் மார்க் கிராமம் – கரிசல் மண் – காதல் – கர்ச்சீப் பறப்பது போன்றவற்றுக்கு முற்றிலும் மாறுபட்டவையாக இருக்கின்றன. ஓர் ஆழமான சமூகப் பார்வையும் சேர்ந்திருப்பது சந்தோஷமாக இருக்கிறது.

விஜயகாந்த், ரோஜா போன்றவர்களை தம் கட்டுக்குள் கொண்டுவந்து, தத்ரூபமாக நடிக்க வைத்திருக்கிறவிதம் சாமான்யமானதல்ல.

ஆனால், பிரச்னையின் ஆழம் தேடி, திரைக்கதை போகிற இயல்பில், தவிர்க்க முடியாமல் ஒரு நாடகத்தனம் வந்து விடுகிறது.

ஆட்சியாளர்களின் தவறுகளைச் சுட்டிக் காட்டி, அதிகாரிகள் தலைமையில் பொது மக்கள் கவர்னருக்கு மனு கொடுக்கப் போகிறார்கள். எப்படி? நடுராத்திரி, கையில் சிம்னி விளக்கு எடுத்துக் கொண்டு அண்ணா மேம்பாலத்தில் ஊர்வலம்!

பலவித கஷ்டங்களுக்கிடையிலும் அரசியல்வாதிகளுக்கெதிராகப் போராடிக் கொண்டிருக்கும் அதிகாரி, உணர்ச்சி வசப்பட்டு துப்பாக்கி எடுக்கப் போகிற போது மனைவியானவர் தடுக்கிறார்.

எப்படி? ஆஸ்பத்திரியில் சாகக் கிடக்கிற போது, தன் வளையல்களைக் கழற்றிக் கொடுத்து, 'இது உங்கள் கையில் உடையாமல் இருக்கிறவரை...' என்று என்னமோ வசனம் பேசி!

நிச்சயம் இதைவிடச் சிறப்பாக யோசிக்கக்கூடியவர் பாரதிராஜா. ஏன் யோசிக்கவில்லை?

ஒரு கலைப் படத்துக்கான விஷயம் – வேகம் இவைகளுடன் தயாராகி இருக்கும் கமர்ஷியல் படம் இது. பாரதிராஜாவுக்குப் பை நிறைய பாராட்டும் பின்னணி இசைக்காக தேவாவுக்கு ஏதாவது விருதும் அவசியம் தர வேண்டும்.

- ஆர்.பி.ஆர்.



1996 ஆகஸ்ட் 18
தாது ஆவணி 2
மலர் : 55
இதழ் : 3

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பேச்சு வார்த்தை பிரமாதம்; பலன்தான் பூஜ்ஜியம்!

'வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னைக்கு, வரலாற்றுத் தீர்வு காண்பதற்காக வரலாற்றுத் துவக்கமாக இப் பேச்சு வார்த்தை அமைந்துள்ளது.'

- காவிரி நீர்ப் பகிர்வு குறித்து தமிழக முதல்வரைச் சந்தித்த கர்நாடக முதல்வர் ஜே.எச். படேலின் அறிக்கை இது!

ஆனால், நடந்து முடிந்த பேச்சு வார்த்தைகள் வரலாறு காணாத கண்துடைப்பு என்பதே உண்மை!

'இடைக்கால பகிர்வுக்கு உடன்பாடு எட்டப்படும்'; 'இரு மாநில விவசாயிகளுக்கும் பாதகம் ஏற்படாது'; 'பரஸ்பரம் நட்புணர்வோடு பேச்சுவார்த்தை நடந்தது'; 'மீண்டும் ஆகஸ்ட் 15க்குப் பிறகு பேசுவோம்...' போன்ற அறிக்கைகளும் சொற்றொடர்களும் செய்தியாகியிருக்கின்றனவே தவிர, தஞ்சை விவசாயிகளின் துயர் இம்மியளவும் குறையவில்லை.

சம்பா பயிரைக் காப்பாற்ற எவ்வளவு தண்ணீர் விடப்படும்? எப்போது விடப்படும்? என்பதற்கான திட்டவட்டமான பதில்கள் இல்லாத நிலையில், விவசாயிகளின் நம்பிக்கையும் பயிரோடு சேர்ந்து கருகிக் கொண்டிருக்கிறது.

காவிரி நடுவர் மன்றம் விதித்ததைக் காட்டிலும் சிறிதளவு குறைந்த நீரை ஏற்கச் சம்மதித்தாலும், தமிழக முதல்வர் தமது மாநிலத்தில் கடும் எதிர்ப்புக்கு உள்ளாவார்.




கர்நாடகாவிலோ, தமிழகத்துக்குத் தண்ணீர் தருவதை எதிர்க்கவென்றே கங்கணம் கட்டிக் கொண்டு ஒரு தீவிர கோஷ்டி அலைகிறது.

மக்களின் இந்த உணர்வுக் கொந்தளிப்புக்கு ஈடாக, அரசியல் சூழ்நிலைகள் வேறு, பிரச்னைக்குத் தீர்வு ஏற்படாமல் முட்டுக்கட்டை போடுகின்றன.

காவிரிப் பிரச்னையில், கடந்தகால மத்திய அரசுகள் நடுநிலை வகித்து, தமிழகத்தின் ஆயக் கட்டு உரிமைகளை மதித்ததாக வரலாறு இல்லை. இப்போதைய அரசியல் சூழலில் அது நிகழும் என்று எதிர்பார்க்கும் அளவுக்குத் தமிழக மக்கள் வெகுளிகளோ ஏமாளிகளோ அல்ல. மத்திய ஆட்சியில் தி.மு.க.வும் ஜனதா தளமும் தோழமைக் கட்சிகளாகிவிட்ட நிலையில், தமிழகத்திலும் கர்நாடகத்திலும் முறையே ஆட்சிப் பொறுப்பில் உள்ள அவ்விரு கட்சித் தலைவர்களும் தங்களுக் கிடையே வேறுபாடுகள் எழுந்தாலும் வெளியில் சொல்லிக் கொள்ளும் நிலையில் இல்லை. தோளைச் சுற்றிக் கரம் வளைத்து, சிரித்தபடி போட்டோவுக்குப் 'போஸ்' கொடுத்துத்தான் ஆகவேண்டும்!

உச்சநீதி மன்றம் உத்தரவிட்டதன் பேரில், அதைத் தட்ட முடியாமல், ஒரு சம்பிரதாயத்துக்காக நடைபெற்றதுதான் ஆகஸ்ட் 5 பேச்சு வார்த்தை.

எத்தனை முறை பேசினாலும் கருணாநிதி விடாக்கண்டனாகவும் படேல் கொடாக்கண்ட னாகவும்தான் தொடர வேண்டும் என்பதை நன்கு உணர்ந்தும், உச்சநீதி மன்றம் அவர்களைப் பேச்சு வார்த்தை நடத்தச் சொல்லி உத்தரவிட்டதுதான் வேதனையான விஷயம்.

நடுவர் மன்றம் அமைக்கப்பட்டு, அது ஒரு தீர்ப்பையும் அளித்துள்ள நிலையில், 'அந்தத் தீர்ப்பை உடனடியாக அமுல்படுத்த வேண்டும்' என்றாவது உச்சநீதிமன்றம் குறைந்தபட்சம் உத்தரவு பிறப்பித்திருக்கலாம்.

மனித உரிமை, ஊழல் புலனாய்வு, அரசியல் தலைவர்களின் பேரிலான குற்றச்சாட்டுக்கள் போன்ற விஷயங்களில் உச்சநீதிமன்றம் முனைப்புடனும் துணிச்சலுடனும் ஆணைகள் பிறப்பித்து,




வழக்குகளில் திருப்பங்களை ஏற்படுத்தியிருக்கிறது. அதே அதிகாரத்தைப் பயன்படுத்தி, ஆயிர மாண்டுகளுக்கும் மேலாக தமிழக மக்கள் அனுபவித்து வரும் ஆயக்கட்டு உரிமைகள் மதிக்கப்பட வேண்டும் என்று உச்சநீதி மன்றம் நேரடி உத்தரவையே பிறப்பிக்கலாம்.

ஆனால், காவிரி நடுவர் மன்றத் தலைவரின் திடீர் ராஜினாமாவுக்கான காரணம் என்ன? அவருக்குப் பதிலாகப் புதிய தலைவர் ஏன் இன்னும் நியமிக்கப்படவில்லை? என்ற கேள்விகளைக் கூட உச்சநீதி மன்றம் எழுப்பவில்லை. வெறுமே 'பேச்சு வார்த்தை நடத்துங்கள்' என்று சொல்லி தண்டச் செலவுக்குத்தான் வழிவகுத்திருக்கிறது.

பருவமழை கணிசமாகப் பெய்து, தண்ணீர் அதிகமாக உள்ள நிலையில், பிரச்னையே எழப்போவதில்லை. 'பகிர்வு' என்பதே, குறைவாக நீர் உள்ள காலத்திலும் தமிழகத்துக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்பதற்காக ஏற்படுத்தியதுதான். எனவே 'காவிரியில் தண்ணீர் இல்லை. இருந்தால்தானே கொடுப்போம்' என்ற கர்நாடகத்தின் வாதம் எந்தக் கட்டத்திலும் ஏற்கக்கூடியது இல்லை.

காவிரியையே முழுதும் நம்பாமல், தமிழகத்தின் - குறிப்பாக தஞ்சைப் பகுதியின் - சாகுபடி முறைகளை மாற்றி அமைத்து விடலாமே என்பது ஒரு வாதம்.

இத்தகைய நீர் நிர்வாகத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்தும் அறிவும் திறனும் நமது விவசாயி களுக்கு இருக்கிறது. அதன் மூலம் தண்ணீர் தேவை சற்று குறையலாம். அந்நிலையிலும் கர்நாடகம் காவிரி நீரை ஓரளவு குறைத்து அனுப்பலாமேயொழிய ஒட்டுமொத்தமாக நமது உரிமையை மறுக்கலாகாது.

எனவே, தொன்றுதொட்டு அனுபவித்து வரும் ஆயக்கட்டு உரிமைகளுக்காகப் போராடுவதும் அதைச் சட்டபூர்வமாகப் பெற்றுத்தர உச்சநீதி மன்றத்தை வற்புறுத்துவதும் தமிழக முதல்வரின் முக்கியமான கடமையாகிறது. கூட்டணி கண்ணோட்டங்களை மறந்து, இந்த விஷயத்தில் கருணாநிதி கண்டிப்புக் காட்டியாக வேண்டும்.



• ஷ்ரேயா



• வைதேகி



• ரங்கநாதன்

• இந்துமதி





• உஷா நந்தகுமார்

• சங்கர்





• அகிலா

• சாரதி

• கார்த்திக்





• இக்பால்

• விநாயகன்





# ஐம்பதாண்டு சுதந்தரம்;

# ஒரு குவிஸ்!



• கல்யாணி

• கிருஷ்ணம்மாள்



• சிவகாமி



• சங்கீதா



• மனோகர்



• ராமகிருஷ்ணன்



• பாஸ்கரன்

• ஹேமானந்த்



• முரளீதரன்









• விட்டல்



• சித்ரா



• மணிகண்டபிரசாத்

• பாஸ்கர்


• முத்து கிருஷ்ணன்





• ராஜலட்சுமி



• கௌசல்யா



• குணசேகரன்



• சந்திரபானி



• துரைராஜன்



• திருமலை



• உஷா



• ரவிச்சந்திரன்



• பார்வதி



• சுமித்ரா



நம் நாட்டுக்கு சுதந்தரம் கிடைத்து 49 ஆண்டுகள் முடிந்து விட்டன. ஐம்பதாமாண்டு ஆரம்பிக்கும் இந்த நேரத்தில், சுதந்தரம் தொடர்பாகத் தாங்கள் கண்ட, கேட்ட அல்லது படித்த விஷயங்களை மக்கள் எந்த அளவு நினைவில் பதிய வைத்துக் கொண்டிருக்கிறார்கள்? அறிந்து கொள்ள ஐம்பது பேரைத் தொடர்பு கொண்டு ஆளுக்கொரு கேள்வி கேட்டோம். சிலர் டக்கென்று பதிலளித்தனர். வேறு சிலருக்கு க்ளுக்கள் தேவைப்பட்டன. இன்னும் சிலருக்கு நாம் கேட்ட

• சாந்தி



• கணேஷ்



• நாகராஜன்



• சந்திரகுமார்



• பாலகோபால்



• தங்கராஜ்



• லலிதா



• சதீஷ்



• தீபா




• விநாயக மூர்த்தி


• வைதேகி முரளி


• பவானி


• சீனிவாசன்

**முதல் கேள்விக்குப் பதில் தெரியாததால் வேறொரு கேள்வியைக் கேட்க வேண்டி வந்தது...**

1) ● சுதந்திர இந்தியாவின் முதல் பிரதமர்...
**வைதேகி:** நேருதான்.
● கேள்வியை முடிக்கலையே! சுதந்தர இந்தியாவின் முதல் பிரதமர் ஜவாஹர்லால் நேருன்றது நமக்குத் தெரியும். முதல் துணைப் பிரதமர் யார்? மிகவும் பிரபலமான சுதந்தரப் போராட்ட வீரர் இவர்... ஓ.கே. இதோ இன்னொரு க்ளு. அவரை 'இரும்பு மனிதர்னு' சொல்வதுண்டு.
**வைதேகி:** வல்லபாய் பட்டேல்

• காந்தி

2) ● நவம்பர் 14ஆம் தேதியை யாருடைய நினைவாகக் கொண்டாடுகிறோம்?
**ஷ்ரேயா:** சில்ரன்ஸ் டே.
● அதில்லே. எந்த தேசியத் தலைவரின் பிறந்த நாள் அது?
**ஷ்ரேயா:** ஜவாஹர்லால்நேரு.

3) ● முதலாம் சுதந்திரப் போரைத் தலைமை ஏற்று நடத்தியவர் முகலாய பரம்பரையின் கடைசி சக்கரவர்த்தியும் கூட. அவர் யார்?
**ரங்கநாதன்:** பகதூர் ஷா ஜபர்.

• நேரு

4) ● குஜராத்தில் காந்திஜியின் ஆசிரமம் எந்த நதியின் கரையில் அமைந்துள்ளது?
**இந்துமதி:** சரயு நதி... சரியில்லேன்ற மாதிரி பார்க்கறீங்களே. ஓ, சரயு அயோத்தியிலே ஓடுதில்லே? இப்போ ஞாபகம் வந்துடுத்து. குஜராத்தில் சபர்மதி நதிக்கரையிலேதான் காந்திஜியின் ஆசிரமம் இருக்குது.

5) ● சுதந்திரப் போராட்ட காலத்தில் காங்கிரஸின் தீவிரவாத பிரிவைச் சேர்ந்தவர்களில் மூன்று பேரை 'லால், பால், பால்' என்று அழைத்தார்கள். அவர்கள் யார்?
**உஷா நந்தகுமார்:** லாலா லஜபதி ராய், பிபின் சந்திரபால், பாலகங்காதர திலகர் ஆகியோர்தான் அவர்கள்.

6)● நம் தேசியக் கொடியின் நடுவில் இப்போது சக்கரம் இருக்கிறது. அதற்கு முன் இதன் இடத்தில் என்ன இருந்தது?
**சங்கர்:** கை ராட்டினம் இருந்தது. காங்கிரஸ் கட்சியின் கொடியிலும் இது இருந்ததால், இது தேசிய கொடியில் அசோக சக்கரமாக மாற்றப்பட்டது.


• அன்னி பெஸன்ட்

7) ● தென்னிந்தியாவைச் சேர்ந்த இந்த சுதந்தர போராட்ட வீரர். இலக்கிய அறிவுக்கும் மீசைக்கும் பேர் போனவர். அவர் யார்?
**சாரதி:** ம.பொ.சி. தானுங்களே. முன்னேயெல்லாம் தேனாம்பேட்டை பகுதியெல்லாம் ஏதோ பாலைவனம் மாதிரி இருக்கும். அப்போ சுதந்திரப் போராட்ட மீட்டிங்குகளுக்கு நான் விடாமல் போவேன். ம.பொ.சி.யின் பேச்சு என்றால் நிறையக் கூட்டம் வரும்.

8) ● சில சுதந்தரப் போராட்ட வீரர்களின் வாழ்க்கை வரலாறு திரைப்படங்கள் ஆனதுண்டு. அப்படி ஒரு படத்தைக் குறிப்பிடுங்களேன்.
**இக்பால்:** ஜனங்களை அடிமையாக்குவதே சினிமாதானே? நான் சினிமா தியேட்டர் பக்கமே தலைவச்சிப் படுத்ததில்லே.

9) ● 'கப்பலோட்டிய தமிழன்' படத்தில் ஒரு சிறந்த சுதந்தர தியாகியின் பாத்திரத்தை டி.கே. சண்முகம் ஏற்று நடித்திருந்தார். அந்த பாத்திரம் எது?
**விநாயகன்:** சுப்ரமண்ய சிவா.

10) ● சுதந்திர இந்தியாவின் முதல் ஜனாதிபதி மற்றும் உதவி ஜனாதிபதி யார்?
**கார்த்திக்:** முதல் ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத். உதவி ஜனாதிபதி... டக்குனு நினைவுக்கு வரமாட்டேங்குது.
(சுதந்திர இந்தியாவின் முதல் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதா கிருஷ்ணன். -நாம் சொல்லுகிறோம்!)

11) ● வழக்கறிஞர் தொழில் செய்ய வெளிநாடு ஒன்றுக்குச் சென்றிருந்த மகாத்மா காந்தி, அங்கு இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைக் கண்டுதான், போராட்ட களத்தில் குதித்தார். அந்த நாடு எது? சரி, இதோ ஒரு க்ளு. நெல்சன் மண்டேலா இப்போது அந்த நாட்டின் தலைவராக இருக்கிறார்.
**அகிலா:** தென் ஆப்பிரிக்கா.

• திலகர்



12) ● 'திருப்பூர்'ன்ற ஊரின் பெயரை சொன்னதுமே எந்த சுதந்தர வீரரின் நினைவு வருகிறது?


• சுபாஷ் சந்திரபோஸ்

கிருஷ்ணம்மாள்: கொடி காத்த 'குமரன்' தானே. மறக்க முடியுமா?

13) ● 'இந்திய தேசிய ராணுவம்'ங்கிற அமைப்பை உருவாக்கியவர் யார்?
**கல்யாணி:** ஒரு சந்தேகம். அவர் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் தானே?
(சந்தேகம் இல்லாமல் அவர்தான்)

14) ● சுதந்தரப் போராட்ட உணர்வுகளை, பொதுக் கூட்டங்களில் வெளிப்படுத்தத் தடை போட்டதால் இரண்டு விழாக்களை கேடய மாக்கிக் கொண்டு, அந்த விசேஷங்களில் ஊர் வலங்களின் போது சுதந்திரக் கருத்துக்களைப் பரப்பினார் பால கங்காதர திலகர். அந்த இரு விழாக்களும் எவை?
**சிவகாமி:** மராத்திய மன்னன் சிவாஜியின் பிறந்த நாள் விழா. இன்னொன்று கோகுலாஷ்டமி.
(விடையின் முதல் பாதி சரி. மற்றொரு திருநாள் விநாயக சதுர்த்தி.)

15) ● ஜாலியன் வாலாபாக் படுகொலைக்குக் காரணமான பிரிட்டிஷ் ராணுவ தளபதியின் பெயர் என்ன?
**சங்கீதா:** ஜெனரல் டயர்.

16) ● சென்னையில் பிரபல சுதந்தரப் போராட்டத் தலைவரின் பெயரைக் கொண்ட ஒரு தெருவில், மூன்று தலைவர்களின் நினைவகங்கள் இருக்கின்றன. அது எந்தத் தெரு? அந்த நினைவகங்கள் யாருடையவை?
**மனோகர்:** கிண்டி பகுதியில் இருக்கும் சர்தார் படேல் சாலையில் தான் காந்திஜி, ராஜாஜி, காமராஜ் ஆகிய மூன்று பேரின் நினைவகங்கள் இருக்கின்றன.

17) ● சுதந்தர இந்தியாவின் முதல் சட்ட அமைச்சர் யார்?
**பாஸ்கரன்:** பிற்பட்டவர்களுக்காகப் பாடுபட்டவர். கண்ணாடி கூட போட்டுக்கிட்டு இருப்பார். அரசியல் அமைப்பு சட்டத்தை உருவாக்கக் கூட ரொம்ப உதவினார். டக்குனு பேரு வரமாட்டேங்குதே ஊங், ஞாபகம் வந்திருச்சி, டாக்டர் அம்பேத்கர்தான் அவர்.

18) ● நமது அரசியல் அமைப்புச் சட்டம் எந்த வருடத்தில் இருந்து நடைமுறைக்கு வந்தது?
**ஹேமானந்த்:** ஜனவரி 26ஆம் தேதி. வருஷம் தான் 1948ஆ அல்லது 1950ஆன்னு உடனடியா சொல்லத் தெரியல்லே.
(சரியான விடை - 26.01.1950)

19) ● நவீன இந்தியாவின் தந்தைன்னு அழைக்கப்படுபவர் இவர். பெர்ஷியன், ஆங்கிலம், சமஸ்கிருதம் மூன்றிலும் புலமை மிக்கவர். அராபிக், லத்தின், கிரேக்கம் ஆகிய மொழிகள் கூட தெரிந்த, பிரம்மோ சமாஜத்தின் நிறுவனரான இவர் யார்?
**முரளீதரன்:** ராஜா ராம் மோகன் ராய் தானே. உங்கள் கேள்வியின் பிரம்மோ சமாஜம் பகுதி தான் பதில் சொல்ல உதவியா இருந்தது.

20) ● முஸ்லிம்களுக்குத் தனி நாடு வேண்டும் என்ற முடிவில் தீர்மானமாக இருந்த அன்றைய முஸ்லிம் லீகின் தலைவராக இருந்தவர் யார்?
**ராமகிருஷ்ணன்:** முகமத் அலி ஜின்னா.

• படேல்


21)● பாரதியார் பாடல்கள் மட்டுமே அமைந்த, சுதந்தரத்துக்கு முன் வெளி வந்த தமிழ்த் திரைப்படம் எது?
**விட்டல்:** நாம் இருவர். சுதந்தரம் கிடைத்த அன்று தஞ்சாவூரில் உள்ள ஐயம்பேட்டையில் இருந்தேன். எல்லா மூலைகளிலும் இந்த படப் பாடல்கள்தான். தமிழகத்தில் அந்த வாரத்தில் 'நாம் இருவர்' இசைத் தட்டுக்கள் விற்பனையில் சாதனை படைத்தன.


• ம.பொ.சி

22) ● 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோம் என்று' என்று பாரதியார் பாட்டு இயற்றியிருக்கிறார். நாடு சுதந்தரம் அடைந்து எவ்வளவு வருடங்கள் ஆனபின் அவர் இறந்தார்?
**சித்ரா:** இளம் வயதிலேயே யானை மிதித்ததன் காரணமாக அவர் இறந்தது தெரியும். வெயிட். நீங்கள் கேட்டது 'ட்ரிக்கி கொஸ்சன்'. சுதந்தரத்துக்கு முன்னாலேயே பாரதியார் இறந்துட்டதா கேள்விப்பட்டிருக்கேன்...
(1921-ல் காலமானார் பாரதியார்)

23) ● நம் தேசிய கொடியில் உள்ள அசோக சக்கரத்தின் ஆரங்களின் எண்ணிக்கை எவ்வளவு?
**ராஜலட்சுமி:** 24.

24) ● 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா'ன்ற நூல் இந்தியாவின் கடந்த கால சரித்திரத்தை வெவ்வேறு கட்டங்களாக விளக்குகிறது. இதன்



''அந்த ஸ்கூல் உதவி ஆசிரியர் ஒருவர் இங்க் பாட்டிலை தன் தலையில் கவிழ்த்துக் கிட்டார்! ஏன் தெரியுமா?''

''ஏன்?''

''தலை'மை' ஆசிரியராகணும்னு அவருக்கு ஆசை! அதனால்தான்!''

– உ. ராஜாஜி

நூல் ஆசிரியர் யார் தெரியுமா?
**பாஸ்கர்:** ஜவாஹர்லால் நேரு.

25) ● *காந்திஜியின் ஒரு திட்டத்தை 1920ல் நாக்பூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாடு ஒத்துக் கொண்டது. அந்த பிரபல திட்டம் எது?*
**விநாயக மூர்த்தி:** பிரிட்டிஷாருக்கு எதிரான 'ஒத்துழையாமை இயக்கம்.'

26) ● *சேலம் என்றவுடனேயே நினைவுக்கு வரும் சுதந்தரப் போராட்டத் தலைவர் யார்?*
**குணசேகரன்:** சுதந்தரா கட்சியின் தலைவரும் அவர்தானே? 'சோக்கிரகர்' (சாக்ரடீஸ்) என்ற நூலில் ராஜாஜியுடைய மொழிபெயர்ப்புத் திறமையை நான் நிறைய ரசித்திருக்கிறேன்.

27) ● *நமது தேசியப் பாடலை (தேசிய கீதமல்ல; National song) இயற்றியது யார்?*
**கௌசல்யா:** தேசிய கீதமான 'ஜன கன மண'வை எழுதியவர் ரபீந்திரநாத் தாகூர். தேசிய பாடலான 'வந்தே மாதரத்தை' எழுதியவர் பங்கிம் சந்திர சட்டர்ஜி.

28) ● *'ஜெய் ஹிந்த்' என்ற எழுச்சி வாசகத்தை பிரபலப்படுத்தியது யார்?*
**சந்திரபானி:** சுபாஷ் சந்திர போஸ். எனக்கு இந்த கேள்வி வந்தது. ஒரு இனிமையான ஆச்சர்யம். அவர் உருவாக்கின 'பால சேனா'ங்கிற ஸ்கௌட்ஸ் இயக்கத்திலே சின்ன வயசில நானும் இருந்திருக்கேன்.

29) ● *1952ம் ஆண்டு பிரெஞ்சுக்காரர்களிடம் இருந்து நாம் மீட்ட பகுதிகள் என்னென்ன?*
**அபிதா பாபுராவ்:** பாண்டிச்சேரி, மாஹே, யானம்.
(காரைக்காலும் இந்த பட்டியலில் உண்டு)

30) ● *பிரபலமான தண்டி யாத்திரை எங்கே தொடங்கி எங்கே முடிந்தது?*
**துரைராஜன்:** தண்டியில் முடிஞ்சதுன்றது மட்டும்தான் நினைவுக்கு வருது.
(தொடக்கம்: அஹமதாபாத்).

31) ● *வ.உ.சி. பிறந்தது எந்த ஊரில்?*
**திருமலைராமானுஜதாஸன்:** பாளையங்கோட்டை சிறையிலே அவர் செக்கிழுத்தது தெரியும். அவர் பிறந்த ஊர், கண்டு பிடிச்சிட்டேன். ஒட்டப்பிடாரம்.

32) ● *சுதந்திர இந்தியாவின் முதல் கல்வி அமைச்சர் யார்?*
**உஷா:** ஒரு க்ளு கொடுங்களேன்.
● அவர் ஒரு முஸ்லீம்.
**உஷா:** அபுல் கலாம் ஆசாத்.

33) ● *நம் நாட்டு சுதந்திரப் போராட்ட சம்பவங்களை சுவையாக விளக்கி சர்ச்சையிலும் மாட்டிக் கொண்ட ஒரு ஆங்கில நூலை டொமினிக் லேப்பியர் என்பவர் இன்னொருவரோடு சேர்ந்து எழுதியிருக்கிறார். அந்த நூலின் பெயர் என்ன?*
**ரவிச்சந்திரன்:** நான் ரசித்துப் படித்த புத்தகம் அது - 'ஃப்ரீடம் அட் மிட்நைட்'

34) ● *வணிகர்கள் என்ற போர்வையில் தான் பிரிட்டிஷ்காரர்கள் நம் நாட்டிற்குள் முதலில் நுழைந்தார்கள். அந்த வணிக நிறுவனத்தின் பெயர் என்ன?*
**நாராயணசாமி** : ஈஸ்ட் இந்தியா கம்பெனி

35) ● *தண்டியாத்திரை எதற்காக நடத்தப்பட்டது?*
**பார்வதி** : ஏழைகளிலிருந்து எல்லோரும் பயன்படுத்தும் உப்பின் மீது பிரிட்டிஷ் சர்க்கார் வரி விதிச்சதை எதிர்த்துத் தான் அந்த யாத்திரை. அந்தக் காலகட்டத்தில் காந்திஜி தமிழகத்துக்கு வந்திருந்தார். மதுரையிலோ திண்டுக்கல் ரோடிலோ அவரைப் பார்க்கும் பாக்கியம் கிடைத்தது.

36) ● *'சுதந்திரம் எனது பிறப்புரிமை'ன்னு முழங்கியவர் யார்?*
**சுமித்ரா** :- பால கங்காதர திலகர்தான்.

37) ● *'வெள்ளையனே வெளியேறு' போராட்டம் எந்த வருடத்திலே நடந்தது?*
**பவானி** : ஒத்துழையாமை இயக்கம், ஜாலியன் வாலா படுகொலை இதுக்கெல்லாம் அப்புறம் 1942-லே அந்த இயக்கம் நடந்தது.

(தொடர்ச்சி 57ம் பக்கம்...)

"என்ன இருந்தாலும் பத்திரிகையாளனாக இருப்பதில் உள்ள சுகமே அலாதியானதுதான். எத்தனை பெரிய மனிதர்கள், தலைவர்கள், தொழிலதிபர்கள், மேதைகள்! அவ்வளவு பேருடனும் வெகு இயல்பாக அமர்ந்து உரையாட முடிகிற ஆனந்தம் வேறு எந்தத் தொழிலில் கிடைக்கும்? அதனால்தான் அறுபத்திரண்டு ஆண்டுகளாக இப்படி ஒரே துறையில் கொஞ்சம் கூடக் களைப்போ, அயர்வோ ஏற்படாமல் ஈடுபாட்டோடு செயல்பட முடிகிறது" என்கிறார் சேஷன்.

சேஷன்...? 'ஹிந்து' பத்திரிகையின் பொருளாதாரப் பக்கங்களின் முதுகெலும்பு இந்த அனந்தநாராயண சேஷன். "Leo's Notes" தவறாமல் படிக்கிறவர்களே, இவர்தான் லியோ!

"பாரதம் சுதந்திரம் பெற்ற பிறகு அடைந்துள்ள பொருளாதார வளர்ச்சியைப் பற்றிய குறிப்புக்களைத் தொடர்ந்து எழுத வேண்டும். அந்தப் பகுதிக்கு என்ன பெயர் வைக்கலாம்...? சின்னதாய் ஆறேழு எழுத்துக்களில் வருகிற பெயராய்ச் சொல்லேன்..." கேட்டார் ஹிந்து ஆசிரியர் ஜி. கஸ்தூரி.

சேஷன் சொன்னது அந்தத் தலைப்பு : 'லியோவின் குறிப்புகள்' (Leo's Notes)!

சேஷனின் சிம்மராசியே 'லியோ'!



## இந்தச் சுகம் வேறு எதில் வரும்?

மதுரையிலிருந்து திருநெல்வேலி பாலாமடையில் குடியேறிய குடும்பம் சேஷனுடையது. திருநெல்வேலி செயின்ட் சேவியரில் இண்டர் மீடியட்டும் திருச்சிராப்பள்ளி செயின்ட் ஜோசப்பில் பொருளியலில் பி.ஏ.வும் முடித்தவர். கல்கத்தாவில், இவருடைய மாமா, பி.ஆர். ஸ்ரீநிவாசன் நிர்வாக ஆசிரியராக இருந்த 'இந்தியன் ஃபைனான்ஸ்' வார இதழில் வேலைக்குச் சேர்ந்தார். 1934 முதல் 1950 வரை அங்கு வேலை பார்த்தபோதே ஹிந்துவுடன் தொடர்பு

ஏற்பட்டது. 1947 முதல், நிதி நிர்வாகம் பற்றிய கட்டுரைகளை எழுதத் தொடங்கினார்.

தொழிலதிபர் பிர்லா தொடர்பு கொண்டிருந்த "எம்ப்ளாயர்ஸ் அசோசியேஷன்" அமைப்பில் ஏழு ஆண்டுகள் ஆராய்ச்சித் துறை இயக்குநராகவும் பணியாற்றியிருக்கிறார். அப்போதும் ஹிந்துவுக்குக் கட்டுரைகள் எழுதுவதை நிறுத்தவில்லை.

1957 ஆம் ஆண்டு, ஹிந்துவில் முழு நேரத் துணை ஆசிரியர் பதவியில் சேர்ந்தார் சேஷன். புகழ்பெற்ற 'ஹிந்து தொழில் மதிப்பீட்டுச் சிறப்பு மலரை' ஆண்டு தோறும் தயாரிப்பது இவர்தாம்.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் பார்வைக் கோளாறு ஏற்பட்டு, உதவியாளர் இல்லாமல் எங்கும் செல்லவோ, எதையும் படித்து எழுதவோ முடியாத நிலை ஏற்பட்டது இவருக்கு. ஆனால் என்ன? அற்புதமான நினைவாற்றல் கைவரப் பெற்றிருக்கிறார்! கம்ப்யூட்டர் நினைவாற்றல்! ஆறு உதவியாளர்கள், சுருக்கெழுத்தாளர்களை வைத்துக் கொண்டு, ஒரு நாளைக்குப் பன்னிரண்டு மணி நேரம் உழைக்கிறார் இந்த 'இளைஞர்'!

"வாய்ஸ் ஆஃப் அமெரிக்கா, பி.பி.ஸி. செய்தி அறிக்கைகள் என்று பாதி நேரம் விஷயங்களைக் கேட்டு நினைவில் பதிவு செய்து கொள்வதற்கே சரியாய் இருக்கிறது" என்கிறார்.

பொருளாதாரம் சம்பந்தமான ஆய்வு அரங்குகளில் உரையாற்றுவதற்காக முன் கூட்டியே நன்றாகத் தயாரித்துக் கொள்கிறார். அதன்பின் மேடைக்குப் போனால் சாதாரணமாக ஒரு மணி ஒன்றரை மணி உரையாற்றுகிறார்.

வியென்னாவிலிருக்கும் 'ஐக்கிய நாடுகளின் தொழில் வளர்ச்சி அமைப்பு' (United Nations Industrial Development Organisation) ஒவ்வொரு நாட்டுத் தொழில் வளர்ச்சி பற்றியும் ஆராய்ந்து நூல்கள் வெளியிடுவது வழக்கம். பாரதம் பற்றியும் ஒரு தொகுதி வெளியிட்டார்கள். அந்தப் பணியில் உதவுவதற்காக அவர்கள் தேடிப் பிடித்த ஆள் 'வியோ'தான்.

"பொருளாதார வளர்ச்சியில் நாம் எவ்வளவோ முன்னேறி விட்டோம். அதுவும் கடந்த ஐந்து ஆண்டுகளில் - மன்மோகன் சிங் காலத்தில் ஏற்பட்ட அபரிமிதமான

வளர்ச்சி அப்படியே பின்பற்றப்பட்டால் இன்னும் ஒரு பத்தாண்டுகளில் நாம் மிகவும் உயர்வான நிலையை எட்ட முடியும்" என்று நம்பிக்கையோடு, உறுதியாகச் சொல்கிறார் சேஷன். இந்த வளர்ச்சிச் சாதனையில் தமிழ் நாடு சமச்சீரான நிலையில் முன்னேறி வருகிறது. தவிர மகாராஷ்டிரா, குஜராத், அரியானா, பஞ்சாப் ஆகியவையும் சிறப்பாக முன்னேறுகின்றன என்றும் வரிசைப் படுத்துகிறார் சேஷன்.

"நிதி ஆதாரங்களைக் குவிப்பது, விரயம் ஏற்படாமல் சேமிப்பது. இதுதான் பொருளாதார பலம். வெளிநாட்டு முதலீடு நிறைய வரவேண்டும். வேளாண்மை வளர்ச்சிக்கு நிறைய முதலீடு வேண்டியிருக்கிறது. அதற்கான வேலைகள் முனைப்போடு மேற்கொள்ளப்பட வேண்டும்" என்கிறார். தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு அடித்தளமிட்டவர் என்கிற முறையில் ஆர்.வி.யிடம் அதிக ஈடுபாடுள்ளவர். ஆன்மிகத் துறையிலும் சிருங்கேரி ஆசார்யாளின் தீவிரமான பக்தர்.

கல்லூரிப் படிப்பை முடித்த கையோடு, கல்கத்தாவுக்கு அதுவும் பத்திரிகையாளனாக வேலைக்குப் போவதில் இவருடைய தகப்பனாருக்கு விருப்பமில்லை. 'என்ன பிரமாதமாகச் சம்பாதிக்கப் போகிறாய்?' என்று தயங்கினார். "என்னால் டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் என்று படித்து விட்டுச் சாதாரண வேலைக்கெல்லாம் போக முடியாது" என்று பதில் சொன்னார் சேஷன்.

சேஷனுக்கு அறுபது வயதான போது, அவருடைய சாதனைகளைப் பாராட்டி ஒரு விழா ஏற்பாடு செய்தார்கள். 1973-ல், அப்போதைய அமைச்சர் கே. ராஜாராம் தலைமையில் நடைபெற்ற விழா அது. இதற்காகத் தொழிலதிபர்களும் பங்குச் சந்தை உறுப்பினர்களும் சேர்ந்து என். மகாலிங்கம் தலைமையில் திரட்டிய நிதியில், செலவு போக மீதமிருந்ததை சேஷன் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று அமைப்பாளர்கள் விரும்பினார்கள். ஆனால் சேஷன் அதைத் தாம் ஏற்றுக் கொள்ளாமல், பொது நலனுக்குப் பயன்படும் வகையில், ஓர் அறக் கட்டளையாக நிறுவக் கேட்டுக் கொண்டார். இருபது ஆண்டுகளாக இந்த அறக்கட்டளையிலிருந்து வரும் வருமானத்திலிருந்து சென்னைப் பல்கலைக் கழக மாணவர்கள் நால்வருக்கு உதவித் தொகை வழங்கப்படுகிறது. அதே போல், பத்திரிகைப் பணியில் சிறப்பாகச் செயல்படுவதற்காக டாக்டர் எம்.ஏ.எம். ராமசாமி, தென்னிந்திய சேம்பர் ஆப் காமர்ஸ் ஏற்பாடு செய்த பாராட்டில், இருபதாயிரம் ரூபாய் வழங்கினார். இத்தொகையையும் சேம்பர் ஆப் காமர்ஸ் வழங்குகிற உதவித் தொகை அறக் கட்டளைக்கே தந்து விட்டார் சேஷன்!

சந்திப்பு : **சுப்ரபாலன்**
வண்ணப்படம் : **யோகா**



"என்னதான் டாக்டருக்கு இது முதல் ஆபரேஷன்னாலும் அதுக்காக இப்படியா?"
— டி.எஸ். திருமலைராயன்



"ஆயிரம் பொய்யைச் சொல்லி ஒரு கல்யாணத்தைப் பண்ணுன்னு சொல்லுவாங்க. நான் ஒரே ஒரு பொய் சொல்லி கல்யாணம் பண்ணிக்கிட்டு மாட்டிக்கிட்டேன்."
"என்ன பொய் சொன்னே?"
"எனக்குக் கல்யாணம் ஆகலைன்னு!"
— வெ. ராஜாராமன்



● ஆயிரம் எதிரிகளை விட, ஒரு போலி நண்பனால்தான் அதிக தீமை.
— அர்மீனியப் பழமொழி
தொகுப்பு : ஆர். பிரகாசம்

# காத்திருத்தல்

டவுன் பஸ்சுக்காகக் காத்து நின்னுக் கிட்டிருக்கான் அந்த இளைஞன். வர்ற பஸ்செல்லாமே நிக்காமப் போயிடுது. பஸ் ஸ்டாப்புல அவ்வளவு கூட்டம்.

ஒல்லியான இளைஞன் அவன். பேண்ட், முழுக்கைச் சட்டை போட்டு, இன் பண்ணியிருக்கான். கழுத்துல தங்கச் சங்கிலி, கையில பிரீப்கேஸ். அடிக்கு ஒருதரம் மணிக்கட்டைத் திருப்பி, கடிகாரத்தைப் பார்க்கிறான். ''சை'' அவன் உதடு எரிச்சலோட நெளியுது.



கூட்டத்துல நின்னுக்கிட்டிருந்த ஒருத்தன் நகர்ந்து, அவன் முன்னாடி வர்றான். ரெண்டுங்கெட்டான் தோற்றம். முப்பது வயசு இருக்கலாம். தலை கலைஞ்சு, சட்டை கசங்கி பரிதாபமாத் தெரியிறான். கையில கனமான பை வேற.

பையைக் கீழே வெச்சிட்டு, சட்டைப் பையிலிருந்து ஒரு துண்டுக் காகிதத்த எடுத்து, இளைஞன் கிட்ட நீட்டறான் அவன்.

"இந்த அட்ரஸ் எங்கிருக்குது சார்?"

''அதோ டிராபிக் போலீஸ் நிக்கிறாரு பாரு, அவருக்கு இடதுபுறமாத் திரும்புற ரோட்ல ஒரு நூறு அடி உள்ள போயி, இடது பக்கம் திரும்பி, வலது பக்கம் முதல் சந்துல...''

''நான் வெளியூர் சார். இடம் கண்டு பிடிக்க முடியாம ரொம்ப சிரமப்பட்டுட்டேன். இந்தப் பைல ரேடியோ, டேப்ரிக் கார்டர், கேமரா இப்படி விலையுள்ள சாமான்கள் நிறைய இருக்கு. தனியாப் போக பயமா இருக்குது சார். கொஞ்சம் வந்து வழிகாமிச்சி விட்டிட்டிங்கன்னா...''

"இல்லப்பா, ரொம்ப அவசரமாப் போகனும் எனக்கு."

"சார், எல்லாம் வெளிநாட்டு அயிட்டம் சார். எனக்குப் பணம் ரொம்பத் தேவை. அதுதான் அந்த ஆளத்தேடிக்கிட்டுப் போறேன். உங்களுக்குக் கூட தேவையின்னா ஏதாவது எடுத்துக்கலாம். பாதி விலை - கால் பங்கு விலையில தர்றேன்.... பிடிச்சத எடுத்துக்குங்க. கொஞ்சம் உதவுங்க சார்... ப்ளீஸ்....''

எல்லோருடைய கண்களும் டெலிவிஷன் பெட்டியிலேயே நிலைகுத்தியிருந்தன.

"டொக், டொக், டொக்"... வீட்டுக் கதவு தட்டப்படுது. யாரும் கவனிக்கல்ல. டி.வி. பெட்டிக்குள்ள நடக்குற நாடகத்தில் அந்த அளவுக்குக் கரைஞ்சு போய்க் கிடந்தாங்க வீட்டுக்காரங்க.



**பொன்னீலன்**

கதவு தீட்டும் ஓசை பலமாக் கேட்குது. எல்லாருக்கும் கேட்குது. ஆனாலும் யார் போயி திறக்குறது? கதை ரொம்ப தூரத்துக்கு நகண்டு போயிடுமே! பார்வையால வீட்டுத் தலைவன் தலவியைக் கெஞ்ச, தலைவி மகளைக் கெஞ்ச, மகள் தம்பியைக் கெஞ்ச, தம்பியோ பக்கத்து அறையில் வாரப் பத்திரிகையைப் புரட்டிக்கிட்டிருந்த தாத்தாவைக் கெஞ்சினான்.

''தாத்தா தாத்தா, யாரோ கதவத் தட்டுறா, பாரு.''

மூக்குக் கண்ணாடியச் சரி செய்துட்டு, சிவந்த வழுக்கைத் தலையைத் தூக்கினார் தாத்தா.

"ஏன், நீ திறந்தா என்ன?"

"டீ.வியில கதை போயிடும் தாத்தா."

இந்த உரையாடல் இடஞ்சலக் கூட குடும்பத் தலைவனால சகிச்சுக்க முடியல்ல. கடுகடுப்பா முகத்தைத் திருப்பி, மகனை அதட்



"உங்க கட்சிக் காரங்க நிறையப் பேர் இந்த ஜெயில்ல இருக்கலாம்; அதுக்காக மாநாட்டை இந்த ஜெயில் லயே நடத்தலாம்னு கேட்கிறது சரியில்லே, சொல்லிட்டேன்!"

– சீர்காழி வி.ரேவதி.

டினார். "ஏன்டா இப்படி நாய் மாதிரி கத்துற?"

வேற வழி இல்ல. இனியும் இடைஞ்சல் செய்தா உதை கிடைக்கும். முகத்தைச் சுளிச்சிட்டே எந்திரிச்சிப் போயி கதவைத் திறக்குறான் மகன். கிராமத்து ஆளு ஒருத்தர் ஒரு முகவரியை அவன்கிட்ட பரிதாபமா நீட்டினாரு. "இந்த வீடு எங்க இருக்குது தம்பி?"

"போய்யா, அடுத்த தெருவுல போயி கேளுய்யா!" கடுப்பாகிப் போயி கதவை அறைஞ்சி சாத்திட்டு, சோபாவுல பாய்ஞ்சான் தம்பி.

"இது திரைடா, வாழ்க்கை இல்ல. திரையிலேயே மூழ்கிப் போயிடாதே. தன் அறையில இருந்து பேரனுக்குப் புத்தி சொன்னார் தாத்தா.

"திரையும், வாழ்க்கையும் எங்களுக்கு ஒண்ணாயிடுச்சி தாத்தா."

தாத்தா வாயைத் தன் பதிலால் சாத்திட்டு, திரையைத் தேடினான் பேரன். நல்ல காலம், உச்சகட்டம் இன்னும் வரல. இளைஞன் முன்னாடி, கையில கமையோட அந்த இரண்டுங் கெட்டான் புதியவன் பின்னாடியுமா நடந்துக்கிட்டிருக்காங்க. குறுகலான சந்து. ஆள் நடமாட்டம் இல்லை. திடீர்னு பார்த்தா, அங்கிட்டு இருந்து ரெண்டு பேரு. இங்கிட்டு இருந்து ரெண்டு பேரு இவுங்கள நோக்கி வேகமாக வராங்க. ரெண்டு செகண்டுதான். நாலு பேரும் இவுங்க ரெண்டு பேரையும் சூழ்ந்துட்டாங்க. குண்ணமான மொட்டத் தலையன் தன் இடுப்பிலிருந்த பட்டாக் கத்தியை உருவி அந்த இளைஞனுக்கு நேரே பிடிக்கிறான். "பையில இருக்கிற பணத்தை எடுடா."

இன்னொருத்தன் அவன் கழுத்துச் சங்கிலிக்குக் கையை நீட்டுறான். ஒருத்தன் அவன் சட்டையைக் கிழிச்சி உள் பாக்கெட்டைத் துழாவுறான். இளைஞனை அழச்சிட்டு வந்தானே அவன் இளைஞனோட மூஞ்சியில குத்துறான்.

பயங்கரமான சூழ்நிலை. என்ன பண்றதுன்னு புரியாத தவிப்பு. தலைவன், தலைவி, மகன், மகள்... டீ.விப் பெட்டி முன்னாடி உக்காந்திருக்கிற அத்தனை பேருமே துடிக்கிறாங்க, பதைக்கிறாங்க....

திடீர்னு ஒரு உறுமல். மின்னல் வேகத்துல ஒரு மோட்டார் பைக் அங்க வருது. வெளிநாட்டு பனியனும், ஜீன்சும் அணிஞ்ச இளைஞன் பைக்கிலிருந்து நேரே அந்தர் கரணமடிச்சி, ரவுடிகளுக்கு மத்தியில குதிக்கிறான்.

"டிஷ்ம், டிஷ்ம், டிஷ்ம்...."

"ஐய்யோ, என்னைக் காப்பாத்துங்க... காப்பாத்துங்க..."

ஜன்னல் வழியாகத் தெருவில இருந்து பாயுது ஒரு பெண்ணோட அலறல். டீ.வி. பாத்துக்கிட்டிருந்தவங்களுக்கு ஏக குழப்பம். டீ.வியைப் பார்க்கவா, தெருவைப் பார்க்கவா? சட்டுன்னு ஒரு தீர்மானத்துக்கு வந்தவன் தம்பிதான். எந்திரிச்சி வேகமா ஜன்னலுக்கு வந்தான். அவனுக்குத் திருப்தியா இருந்தது. டீ.வியை விட இந்தக் காட்சி அபாரமா இருந்தது. ரெண்டு ரவுடிகளுக்கிடையில மாட்டிக்கிட்டிருந்தாள் ஓர் இளம் பெண். ஒருத்தன் அவளைப் பிடிச்சிக்கிட்டிருந்தான். மத்தவன் அவளோட நகைகளை உருவிக்கிட்டு இருந்தான். பயங்கரமா அலறிக்கிட்டு இருந்தா அவ....

"வாங்க... வாங்க, எல்லாரும் வாங்க.." அவசரமா மத்தவங்கள அழைச்சான் தம்பி. "எந்த டீ.வியிலயும் பார்க்காத தத்ரூபக் காட்சி, ஓடிவாங்க!"

எல்லாரும் ஜன்னலுக்கு வந்தாங்க. தம்பி சொன்னது நிசந்தான். அறுபடாத அவ தாலிச் சங்கிலிய, அவனுக ஒரு பக்கம் இழுக்க, அவ மறு பக்கம் இழுக்க, ரொம்ப அருமையான காட்சிதான்!

தாத்தாவால தாங்க முடியல. கத்துறாரு. "தடிமாடு போல பார்த்துக்கிட்டு நிக்கிறீங்களே. ஓடிப் போயி காப்பாத்துங்கடா!"

தாத்தாவோட அப்பாவித்தனத்தைப் பார்த்துச் சிரிச்சாள் பேத்தி.

"பொறு தாத்தா, அவசரப்படாதே. இப்ப வந்துடுவான் கதாநாயகன். எங்கியோ பைக் சத்தம் கேக்கற மாதிரி இருக்குது பாத்தியா... வந்துக்கிட்டிருக்கான்... கத்தாதே....."

அத ஆமோதிக்கிற மாதிரி எல்லாரும் தாத்தாவ ஏளனமாய்ப் பார்த்தாங்க.

பிறகு...

கதாநாயகனோட வருகைக்காக ஜன்னல் கம்பிகளைப் பிடிச்சிட்டு மொத்தக் குடும்பமும் காத்து நிக்குது....

# INRECO புதிய வெளியீடுகள்



## Divine Melodies

பாடியவர் : பம்பாய் சகோதரிகள்

C–566 விலை: ரூ. 35/-



## GOLDEN MARVELS

பாடியவர் : S. நித்ய ஸ்ரீ

C–561 விலை: ரூ. 38/-



## SUPREME CLASSICS

பாடியவர்: நெய்வேலி
R. சந்தான கோபாலன்

C–545 விலை: ரூ. 38/-



## Divine Moods

பாடியவர்: நெய்வேலி
R. சந்தான கோபாலன்

C–568 விலை: ரூ. 38/-



## CAPTIVATING CLASSICS

பாடியவர்: S.P. ராம்

C–564 விலை: ரூ. 38/-

Previous Release

## Sweet Blend of Tradition

C–546 விலை: ரூ. 38/-

எல்லா கேசட்
கடைகளிலும் கிடைக்கும்

Marketed by :
**INRECO**
**MARKETING SERVICES**
19, Dr. Ranga Road,
Madras-600 004.
Phone : 4998090

வி.ஐ.பிக்கு வந்த கடிதங்கள்...

# "பழைய நாட்களை நினைக்க வைத்த கடிதம்!"

டாக்டர் வாசவனிடம் நான் அறிமுகமான நாட்களை நினைக்க வைத்தது அவரது கடிதம். லேடி சிவசாமி பள்ளியில் படித்துக் கொண்டிருக்கும்போது பாட்டுப் போட்டி, பேச்சுப் போட்டி, நாடகம் என்று எல்லாவற்றிலும் பரிசு வாங்கியதுண்டு. பள்ளி நாடகம்தானே என்று ஏனோதானோவென்று இருக்க மாட்டார்கள். பள்ளி நாடகத்தில் என் திறமையைக் கண்ட வாசவன், தாம் தயாரித்த வானொலி நாடகங்களில் என்னைப் பங்கேற்க வைத்தார். பக்கம் பக்கமான வசனங்களை நான் உணர்ச்சிகரமாகப் பேசியதைக் கண்டு மகிழ்ந்துபோய் தனிப்பட்ட முறையில் ஒரு வெள்ளி தம்ளரை எனக்குப் பரிசளித்தார்.

காலப் போக்கில் எங்கள் சந்திப்புக்கள் நின்று போய் விட்டன. திருமணமானபிறகு

வண்ணப்படம்:
பேஜர் கே. மூர்த்தி



கணவர் இருந்த பம்பாய்க்கு மாற்றல் வாங்கிக் கொண்டேன். இசையில் முழு கவனம் செலுத்த, வேலையை ராஜினாமா செய்தது, வசந்த் தேசாயின் மூலம் இந்தித் திரையுலகில் அறிமுகம், தொடர்ந்து தமிழ்ப் படங்களிலும் பின்னணி என்று வெவ்வேறு கட்டங்களைத் தாண்டி சென்னையில் செட்டிலானபோது, டாக்டர் வாசவனின் புத்தக விழாவிற்குச் சென்றிருந்தேன். என் முன்னேற்றத்தைப் பார்த்து ஆத்மார்த்தமாக சந்தோஷப்பட்டார்.

மறைந்த என் தந்தையைப் பற்றி வாசவன் குறிப்பிட்டிருக்கிறார். கடிதத்தைப் படித்த அன்று என் அப்பாவின் நினைவு கொஞ்சம் அதிகமாகவே வந்தது. அரட்டை கூடாது, சீப்பில் முடியிருக்கக் கூடாது, வீடு வெகு சுத்தமாக இருக்க வேண்டும். இயற்கை வைத்தியம்தான் சிறந்தது என்பது போன்ற பல ஒழுக்கக் கோட்பாடுகளை எனக்குள் விதைத்தவர் என் தந்தைதான்.

துரிய வாழ்வை நான் வாழ்வதாக வாசவன் குறிப்பிட்டிருக்கிறார். நான் வைர நகை அணியக் கூடாது என்ற கொள்கை உள்ளவள். 'ஷோ பிஸினெஸில்' உள்ள காரணத்தால் ஓரளவுக்கு உடை வகைகளை வைத்திருக்கிறேனே தவிர பட்டு போன்ற பகட்டுகளையெல்லாம் வாங்குவதில்லை. ஆசிரமங்களுக்கோ (உண்மையான சாமியார்கள் உள்ள இடங்களைச் சொல்கிறேன்), கோவில்களுக்கோ சென்றால் கூட, தரிசனத்துக்குத் தனி ஏற்பாடு செய்து கொள்ள முயற்சிக்க மாட்டேன்.

என் கணவர் பற்றியும் கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அவர் ஆஜானுபாகுவான தோற்றப் பொலிவு கொண்டவரல்ல. ஆனால் 'இவர்தான் மிஸ்டர் வாணிஜெயராம்' என்று அறிமுகப்படுத்தப்பட்டால் கூட அதை சகஜமாக ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் கொண்டவர்.

நல்லதொரு மனக்கட்டுப்பாடுடன் வாழ்கிறேன். இதில் எனக்கு நிறைவு. இதைப் புரிந்து கொண்ட டாக்டர் வாசவன் போன்றவர்கள் இருப்பதில் மேலும் நிறைவு.

**- வாணி ஜெயராம்**

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்**

9.4.92

சென்னை

பேரன்புக்கும், பெரும் பாசத்துக்கும் உரிய திருமதி வாணிஜெயராம்,

நலங்கள் வாழிய! நாத சாகரமே! நேற்றைய நாளிதழ்களில் நீ அகில இந்திய அளவில் சிறந்த பாடகிக்கான விருதைப் பெற்ற செய்தியைப் படித்து மிகவும் மகிழ்ந்தேன். தெய்வீகம் வழங்கிய உன் ஞானத்தேன் குரலுக்கு, இந்திய அரசு நடத்தும் அஷ்டோத்ரம் இது. சஹஸ்ர நாமம், கோடியார்ச்சனை எல்லாம் இனித் தொடர்ந்து நடைபெறும் என்பது தெய்வத்தின் திருநோக்கு. குழந்தைக் கலைவாணியாகச் சந்தித்த பிறகு! ஓர் நீண்ட இடைவெளிக்குப் பிறகு- உன்னைச் சந்தித்தபோது, ஒரு ஞானியைக் கண்ட பரவசம் என்னுள் எழுந்தது. இல்லறத்தில், இசையில், உலகியல் வாழ்வில் நீ தோய்ந்திருந்தாலும், எல்லாவற்றிலுமிருந்து விலகி அல்லது விலக்கி, எதிலும் சம்பந்தப்படாமல் சாட்சியாக இருந்து மட்டுமே நோக்கும் துரிய நிலையை உன்னிடம் கண்டேன். வேறு எந்தப் பெண்ணிடமும் காண முடியாத ஆத்ம தரிசனம் அது. அது சொற்பதம் கடந்த சுகம். உன்னுடைய தந்தை அமரர் துரைசாமி அய்யர் அவர்கள் உன்னை வானிலிருந்து வாழ்த்துவார். இந்த வாசவன், அவரின் வடிவில் மண்ணில் இருந்து வாழ்த்துகிறேன். என் மனைவியும் மிகவும் சந்தோஷப்பட்டாள். தன்னுடைய வாழ்த்துக்களை உனக்குத் தெரிவிக்கச் சொன்னாள். தன் உடல், பொருள், ஆவி என்ற முக்குடைகளாலும் நிழல் பரப்பி, உன்னில் வாழ்ந்து, உனக்காகவே வாழும் பெருமதிப்பிற்குரிய உன் கணவர் திரு ஜயராம் அவர்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவிக்கவும். உன் நாதத் தவம் வாழ்க.

அன்புடன்

வாசவன்

குறிப்பு. தொலை பேசியில் வாழ்த்தைத் தெரிவித்திருக்கலாம். ஆனால் வரிகளால் வாழ்த்தும் அளவுக்கு வார்த்தைகளால் வாழ்த்த இயலாது என்பதால் கடிதம் எழுதப்படுகிறது.

# மும்பையைக் கலக்கும் "பார்" ஆளும் பெண்கள்!

'ராம் பஞ்சாப்'பில் டின்னர் சாப்பிட, குடும்பத்துடன் நுழைந்த மூர்த்திக்கு, அதிர்ச்சி காத்திருந்தது! அரையிருட்டில், அரைகுறை ஆடையில், அழகிகள் அவரை வரவேற்க, ஒரு பக்கத்தில் 'முகாபுலா' பாடல்களுக்கேற்ப உடல் உதறல் நடனங்கள்! அலறி அடித்துக்கொண்டு வெளியே வந்து பார்த்தால், ராம் பஞ்சாப் 'ராஸ் பஞ்சாப்' ஆகி, 'பார் அண்ட் ரெஸ்டாரண்ட்' என்ற புதிய பெயர்ப்பலகை பளபளத்தது!

இது நடந்தது தாய்லாந்திலோ, பாங்காக்கிலோ அல்ல; நம்ம மும்பையில்தான். பீர் குடிப்பதென்பது தண்ணீர் அருந்துவது போல் மாறிவரும் இன்றைய சூழலில், சாதாரண உணவு விடுதிகளெல்லாம் 'பார்' ஆகி வருவது ஒரு புறமிருக்க, அவை 'லேடீஸ் பார்' ஆக உருவெடுத்திருப்பதுதான் பெரிய தலைவலியாகிவிட்டது.

அதுவும், இந்த மாற்றங்கள், மும்பையின் 'கொம்பு முளைத்த பகுதி'களான ஜுஹுவிலோ, பாந்த்ராவிலோ, மலபார் ஹில்லிலோ இல்லை... நடுத்தர வர்க்கத்தினரின் சுவர்க்கமாகக் கருதப்படும் காட்கோபார், முலண்டு, தாணா போன்ற குடியிருப்புப் பகுதிகளில் ஏற்பட்டு, பூதாகரமான பிரச்னையாகியுள்ளன.

இன்று மும்பையில் தொள்ளாயிரத்துக்கு மேற்பட்ட ''பார்''கள் முளைத்துள்ளன! இவற்றில் 436 பார்களில் ஆடல் பாடல் வகையறாக்களும் உண்டு! கிட்டத்தட்ட 40,000 பெண்கள் வெயிட்ரஸ்களாகவும், பாடகியராகவும், நடனப் பெண்களாகவும் இந்த 'பார்'களில் இயங்கி வருகின்றனர்.

''இந்தியன் கிளாசிகல் டான்ஸ்'' நடப்பதற்கான லைசென்ஸ் வழங்கப்பட்டிருந்தாலும், நடப்பதென்னவோ, இந்தி சினிமாப் பாடல்களுக்கான Disco-டப்பாங்குத்துகள்தான்.

வாடிக்கையாளர்களில் பெரும்பாலோர் இளைஞர்கள்; சிலர் குண்டர்கள். ஒவ்வொருவரும் தம்மை ஆமீராகவோ, ஷாருக்கானாகவோ கற்பனை செய்து கொண்டு, இந்தப் பெண்களை மனீஷாவாகவும் மாதுரியாகவும் நினைத்து, உல்லாசமாகப் பொழுதைக் கழிக்க வரும் ஹீரோக்கள்.

இவர்களுக்கு வசதியாக 'பார்' வாசல்களிலேயே, பணத் தோரணங்கள், மலர்ச் செண்டுகள் விற்கும் கடைகள் முளைத்திருக்கின்றன. புதுப் பணக்காரர்கள் சிலர், இந்தப் பெண்களுக்கென்று நகை நட்டுகள் முதல் வீடுகள் வரை என்னென்னவோ வாங்கிக் கொடுத்து சொத்தைக் கரைத்திருக்கின்றனர்!

"பார் மெய்ட்ஸ்" என்ற ஓரளவு மரியாதைக்குரிய இந்தப் பட்டத்துக்குள், சில இடங்களில் சிவப்பு விளக்கு சரக்குகளும் ஊடுருவிவிட்டன. இதனால், சுசமூசாக்கள் பரவி, பொதுமக்கள் பலர் தங்கள் குடியிருப்புப் பகுதிகளின் அமைதியும் கௌரவமும் கெட்டுவிட்டதாகப் புலம்பி வருகிறார்கள். இந்த எதிர்ப்புக் குரல்கள் ஒருவழியாக மந்த்ராலயா, (தலைமைச் செயலகம்) வரை எட்டின. டெபுடி சி.எம். கோபினாத் முண்டே, கலாசார அமைச்சர் பிரமோத் நவல்கர், போலீஸ் கமிஷனர் தியாகி போன்றோர் தலைமையில், ஆலோசனைக் குழு ஒன்று அமைக்கப்பட்டு, சில முக்கியமான முடிவுகள் எடுக்கப்பட்டன.

அதன்படி, ''இரவு 8.30 மணிக்கு மேல் பெண்கள் வேலை செய்யக் கூடாது; 11 மணிக்கு மேல் மதுவகைகளுக்கான ஆர்டர்கள் எடுக்கக் கூடாது; 12.30 க்கு மேல் விடுதிகள் திறந்திருக்கக் கூடாது; நடனங்கள் இந்திய கலாச்சாரத்தின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும்'' போன்ற சட்டங்கள் அமலுக்கு வந்தன.

'இந்தியன் பீனல் கோடுடன் இனி பரதநாட்டியம், குச்சிப்புடி, ஒடிஸி வேறு கற்க வேண்டும்



• போராட்டத்தின் போது....

ஒரு சிலரிடம், 'வேறு வழிகாட்டு கிறோம் வருகிறீர்களா?' என்றால், உடனே 'இந்த வருவாய் வருமா?' என்று கேட்கிறார்கள்!

பதினாறு வயது ராதாவுக்கு, வாரம் ஐயாயிரத்திலிருந்து பதினைந்தாயிரம் வரை கிடைக்கிறதாம்; முப்பதைத் தாண்டிய முக்தாவுக்குக் கூட, வாரம் மூவாயிரத்துக்குக் குறையாமல் வருமாம். இத்தனைக்கும், கிடைக்கும் தொகையில் பாதியை பார்-ஓனருக்குக் கொடுத்து விட வேண்டும். அப்படியிருந்தும் இது மிகவும் லாபகரமான துறை என்பதால்தான் இத்தனை கூட்டம்!

இருந்தாலும் "பணத்துக்காக எதை வேண்டுமானாலும் செய்யலாமா?" என்றதும், "பணம் இல்லாமல் உலகமே இல்லை!" என்று சண்டைக்கே வந்துவிட்டார் ப்ரியா. இவர் ப்ளாஸ்டிக் தொழிற்சாலையில், மாதம் ரூ. 1500 வாங்கிக் கொண்டிருந்தாராம். இன்று இதுபோல் இருபது மடங்கு சம்பாதிக்கிறார்.

"அப்படி என்ன; நாங்கள் இந்த சினிமாக்களில் வருகின்ற ஆபாசத்தை விடவா மட்டமாக ஆடுகிறோம்? 'ஜாகீர் உசேனின் தபலா இதுதானா' என்று மனீஷாவின் பின்னால் கமல் தபலா வாசிக்கிறாரே, இதையெல்லாம் பொதுமக்கள் ஏற்றுக் கொள்ளவில்லையா?" என்றார் காட்டமாக.

மற்றொரு அதிசயம் என்னவென்றால், இந்தப் பெண்கள் யாருமே தாங்கள் செய்யும் தொழிலை இழிவானதாகவோ, கௌரவக் குறைச்சலானதாகவோ கருதவேயில்லை. "எங்களை யாரும் மரியாதைக் குறைவாக நடத்துவதில்லை; அக்கம் பக்கத்தவர்கள் வம்பு பேசுவதில்லை; மது மயக்கத்தில் சிலர் தவறாக நடந்து கொண்டாலும், அதையெல்லாம் சமாளிக்க எங்களுக்குத் தெரியும்! முதலாளிகளும் எங்களுக்குப் பாதுகாப்பளிக்கிறார்கள்" என்கிறார் ஆஷா!

இது எவ்வளவு உண்மையோ தெரியவில்லை! இந்தப் பெண்கள் கடத்தப்பட்டிருப்பதாகவும், கற்பழிப்புத் தொல்லைகளுக்கு ஆளாகியிருப்பதாகவும், அவ்வப்போது தகவல்கள் வந்தவண்ணம்தான் இருக்கின்றன.

போலிருக்கிறதே' என்ற போலீசாரின் முணுமுணுப்பு ஒரு புறமிருக்க, பார் உரிமையாளர்களின் எதிர்ப்பும், 'பார் மெய்டு'களின் கூக்குரலும் பெரும் ஓலமாகி விட்டன. ஜூலை பத்தாம் தேதியன்று, மும்பையில் வரலாறு காணாத புதுவகை ஊர்வலம் நடத்தப்பட்டது. சர்ச்கேட் பகுதியில், சாம்ராட் ஓட்டலுக்கு எதிராக, நானூறுக்கு மேற்பட்ட 'பார் மெய்டுகள்', புதுச் சட்டதிட்டங்களை அரசு வாபஸ் பெற வேண்டுமெனப் போராடினர்! இந்தப் பெண்களைச் சந்தித்த போது, இந்தப் பணியை மேற்கொண்டதற்குப் பெரும்பாலும் வழக்கமான வறுமை சார்ந்த காரணங்களையே சொன்னார்கள்: கணவன் குடிகாரன், அப்பா இல்லை, அம்மாவுக்கு டி.பி., கல்யாணத்துக்குத் தங்கைகள், படிக்க வேண்டிய குழந்தைகள். ஒரு சிலர் மட்டுமே 'நாட்டியத்தில் ஈடுபாடு', 'பாட்டு பிடிக்கும்', 'சினிமாவில் சான்ஸ் கிடைக்கலாம்' போன்ற வித்தியாசமான காரணங்களைச் சொன்னார்கள்.

வேறு வழியில்லாமல் இந்தத் துறைக்கு வந்ததாகச் சொன்ன

ஒரு சுவையான கொசுறுச் செய்தி! சில மாதங்களுக்கு முன் பெண் போலீஸ் அதிகாரி ஒருவர், பகல் வேளைகளில் போலீசாகவும், இரவில் 'பார் மெய்ட்' ஆகவும் வேலை செய்வது கண்டு பிடிக்கப்பட்டு, சஸ்பெண்ட் செய்யப்பட்டார். அவர் சொன்ன காரணம் - "அந்த வேலையில் ஒரு மாதத்தில் கிடைப்பது, இங்கே ஒரே இரவில் கிடைக்கிறதே!"

ஒரு காலத்தில் இந்த மாதிரி வேலை செய்யும் கட்டாயத்துக்குள்ளான பெண்களைப் பார்த்து 'ஐயோ பாவம்' என்றார்கள்! இப்போது அப்படிச் சொல்பவர்களைப் பார்த்து 'ஐயோ பாவம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள் மும்பையில்!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

# ரீவா, சாக்ஷி, ரீத்து,

"ஒரு பொண்ணு. தான் அழகா இல்லைன்னு அதுக்கு ரொம்ப இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளக்ஸ். அழகா இல்லைன்றதுனால காதல் வராம போயிடுமா? அதுவும் ஹீரோயின் வேற. என்ன பண்றா? தான் காதலிக்கிறவனோட டெலிபோன்லயே பேசிப் பேசி மாயறா. அவனுக்கோ, செமை டென்ஷன். என்னடா இவ மூஞ்சியக் காட்டாம இப்படி ரவுசு பண்றாளேன்னு. ஒரு கட்டத்துல அந்தப் பொண்ணு என்ன பண்றா... தன்னோட அழகான ஃபிரெண்டு ஒருத்தியோட போட்டோவை அவனுக்கு அனுப்பி, இதான் நான் அப்படிங்கறா. அண்ணனுக்கு ரொம்பக் குஷி ஆயிடுது. தற்செயலா அந்தப் போட்டோப் பெண்ணை ஒருநாள் பார்த்துவிட்டு, ஓடிப்போய், 'மாட்டிக்கினியா?' அப்படிங்கறான். அந்தப் பொண்ணு பாவம் அப்பிராணி. 'நீ யாரோ, எனக்குத் தெரியாது. ஆளைவிடு'ன்னுட்டுப் போயிடறா. ஒரு வழியா இவனுக்கு விஷயம் தெரிய வருது. ஆரம்பத்துலேருந்தே, தன்னோட டெலிபோன்ல பேசிட்டிருந்தவளைத்தான் அவன் மெய்யாலும் லவ் பண்றான். ஆனா போட்டோ வந்ததும், அந்த மூஞ்சி ரொம்பப் பிடிச்சுப் போயிட்டதுனால இப்ப என்ன செய்யறதுன்னு மண்டையைப் பிச்சிக்கிறான்..."

"ஹோல்டான். ஹோல்டான்!" என்று அலறி, தண்டபாணியின் வாயில் கர்ச்சீப் வைத்து அடைத்து, "தண்டபாணி, இது உனக்கே நல்லா இருக்கா?" என்றேன்.

"அட, விஷயத்தைச் சொல்லவே விட மாட்டேங்கறியே... இந்த ரூட்டுல அர்ஜுன் ஒரு கதை பண்ணி வெச்சிட்டிருந்தாராம். மசாலாவெல்லாம் கலக்காம, புனிதமா எடுக்கணும்னு ஐந்தாண்டு திட்டம் போட்டு வெச்சிருக்காரு. ஆனா என்ன ஆச்சு? 'காதல் கோட்டை' ரிலீஸுக்கு சரியா ரெண்டு நாள் முன்னாடி ப்ரொட்யூசர் பாண்டியன், அர்ஜுனைப் பார்த்து, 'இதான் நாளைக்கு ரிலீஸ் ஆகப் போகிற எங்க படத்தோட கதை' எப்படி இருக்குன்னு கருத்துக் கேட்டாராம்."

"அட, இதுவே ஒரு கதையா இருக்கே?"

"முழுக்கக் கேளு. 'சூப்பரா இருக்கு சார். நீங்க வேணா பாருங்க. இந்தப் படம் சூப்பர்

• சாக்ஷி

# ரட்சனா...

ஹிட்' அப்படீன்னு சொல்லிட்டு விஷ் பண்ணிட்டு வந்துட்டாராம் அர்ஜுன்."

"உனக்கு யார் சொன்னா?"

"அர்ஜுனே தான். 'ஒரேமாதிரி ரெண்டு பேர் யோசிக்கறது ஆச்சர்யமில்லையே. அஃப்கோர்ஸ் அகத்தியன் ரொம்ப நல்லா பண்ணியிருக்கார்' அப்படீன்னாரு."

"பாருய்யா. சினிமா... பீல்டுக்குள்ளார ஒருத்தரை ஒருத்தர் பாராட்டிக்கக் கூட ஆள் இருக்காங்க! போவட்டும். அர்ஜுன் என்ன பண்ணிட்டிருக்காராம் இப்ப?"

"கால்ல சக்கரம் கட்டலை. மத்தபடி டே அண்ட் நைட் பிஸி."

"உதயகுமார் படம் முடிச்சிக் குடுத்துட்டாராமா? ஆஸ்துமா மாதிரி இழுத்துட்டிருந்துச்சி?"

"கிட்டத்தட்ட முடிஞ்சாப்பலதான். டப்பிங்ல இருக்காம். நேத்திக்கி, ஏவி.எம். கார்டன்ல பார்த்தேன் 'தாயின் மணிக்கொடி' ஷூட்டிங்கல."

"சே, டைட்டில்லயே என்ன ஒரு தேசியம்? வழக்கம்போல தீவிரவாதிகள், போலீஸ் கதையாமா?"

"சொல்ல மாட்டேங்கறாரு. ஆனா இது முந்தைய படங்கள்லேருந்து மாறுபட்டதாம்."

"மாறுபடாத ஸ்டேட்மென்ட், விடு!"

"ஆனா ஹீரோயினை மட்டும் மாத்திட்டார்."

"வழக்கமான ரஞ்சிதா இல்லை; விஜயசாந்தி. அதானே சொல்லப் போறே?"

"அவசரப்படாதே. இந்தப் படத்துல ரெண்டு ஹீரோயின். ஒண்ணு விஜயசாந்தி. இன்னொண்ணு, நந்திதான்னு பெங்களூர் புஷ்பம்."

"அப்படிப் போடு."

"பெண்ணைப் பார்த்தா பசி, தூக்கம் தெரியாது. அவ்ளோ அழகு! பெங்களூர்ல மாடலிங் பண்ணிட்டு இருந்ததாம். அர்ஜுன் படத்துல போட்டிருக்காங்கன்ற விஷயம் தெரிஞ்சதும் கோடம்பாக்கம் முழுக்க ஸ்டில்லைப் பார்த்துட்டு, அலறி அடிச்சிட்டு அட்ரஸ் கேக்க வந்துடுச்சாம்."

"ஆட்டோகிராஃப் வாங்கவா?"

"அது உனக்கு சரி, வேற புரொட்யூசருங்க புக் பண்ணற



• ரீவா

• ரட்சனா



"இன்னும் எவ்வளவு நாளைக்குத்தான் என்னைக் கல்யாணம் பண்ணிக்காம ஏமாத்தப் போறீங்க?"
- எஸ்.எஸ். பூங்கதிர்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

துக்குக் கேட்டாங்களாம்ப்பா."

"உனக்குப் புண்ணியமா போகட்டும். அந்த ஸ்டில் இருக்கா?"

"தெரியும் கேப்பேன்னுட்டு. சொல்லி வைச்சிருக்கேன். அடுத்தவாரம் கிடைச்சுடும். அதுக்குள்ள ஒரு காரியம் செய். பொடி நடையா வாகினி வரைக்கும் போயிட்டு வந்துடு."

"எதனா விசேஷமா?"

"பின்னே? நிறைய மாசம் கழிச்சி, பாக்ய ராஜை இப்பத்தான் பார்த்தேன். வாகினியிலே புஸ்தகக் கடை செட் போட்டு ஞானப்பழம் எடுத்துட்டு இருக்கார்."

"ரொம்ப நாளா பழுத்துட்டு இருக்கு, இல்லை?"

"ஆமா. முதல்ல ஆர்.பி. விஸ்வம் டைரக்ட் பண்றாருன்னாங்க. அப்புறம் பாக்யராஜுக் கும் அவருக்கும் ஒத்து வரலைன்னாங்க. அப்புறம் மறுபடி ராசி ஆயிடிச்சின்னாங்க."

"விடமாட்டியே? சமீபத்திய வானிலை அறிக்கை என்ன? அதைச் சொல்லு."

"பொதுவான மேகமூட்டம்தான். நான் பார்த்தபோது விஸ்வம் இல்லை, பாக்யராஜ் தான் பண்ணிட்டிருந்தாரு. என்னவோ, நிதி அமைச்சரோட பினாமி கொலை. ஞானப் ப்ழம் பத்திரிகையோட ஆசிரியர் புலன் விசாரிக்கறாரு. அப்பமுன்னு கதையோட அவுட் லைன் காதுல விழுந்தது."

"ஞானப்பழம்! டைட்டிலே சூப்பரா யில்லே...?

"இப்படிப் பாராட்டறியே. அந்தப் படத்து ஹீரோ மாதிரி ஏதேனும் உருப்படியா புல னாய்வு பண்ணலாமில்ல... இப்படி ஸ்டுடியோ ஸ்டுடியோவா ஏறி இறங்கி... நாட்டைத் திருத்த லாம்னு நினைப்பா...!"

"நான் திருத்தப் போனா இந்த நாடு உருப் படும்னு நினைக்கிறியே - அந்தவரை தாங்க்ஸ்!"

"நாடு உருப்பட சுரேஷ்கோபி நிறைய ஐடியா குடுத்துட்டு இருக்கார். வேணும்னா நீயும் போய்க் கொஞ்சம் கேட்டுக்கோ. கேர ளாவிலேருந்து வந்து, 'மகாத்மா' படத்துக்காக இங்கதான் முகாம் போட்டிருக்கார்!"

"ஒரு நேரடி தமிழ்ப்படம் கூட பண் றாரில்லை?

"ஆமாமா. அமைதிப்பூங்கா, பிரபுவோட சேர்ந்து... அது கிடக்கட்டும். விஷயத்தைக் கேளு. உன்னை மாதிரி ஒரு பேப்பர்காரன், அவர் கிட்டப்போயி, ஏன் இப்படி ஒரே அடிதடிப் படமா எடுத்து வுட்டுட்டிருக்கீங் கன்னு கேட்டிருக்கான். அவ்வளவுதான். அவனைப் புடிச்சி ஒரு வழி பண்ணிட்டார் அண்ணாச்சி, 'நாங்க அநீதி கண்டு பொங்கற கேரக்டர்ல நடிக்கிறோம். அது எப்பேர்ப் பட்ட தேச சேவை! நாங்க துப்பாக்கி தூக்க றோம். அது வெறும் நடிப்பு. அதுக்காக நீங் களும் துப்பாக்கி தூக்கணும்னு இல்லை. நாங்க வில்லன்களைப் பந்தாடுவோம். அதைப் பார்த்துட்டு நீங்களும் அப்படியே செய் யணும்னு இல்லை. அதிக பட்சம் போலீஸ் கம்ப்ளெயிண்ட்தான் தரலாம். நாங்க ஹீரோயினோட ஆடிப் பாடுவோம். நீங்க மனசுக்குள்ளாரவே ஆடிப் பாடுங்க. இப்படி செஞ்சாத்தான் உருப்பட முடியும். சினிமா ஸ்டாருங்களை அப்படியே ஃபாலோ பண்ணா அதோகதிதான் அப்படீன்னாராம்."

"அந்த நிருபர் இன்னும் ரெண்டு மூணு மாசத்துக்கு சலூன் பக்கம் போக வேண்டி இருக்காதுன்னு நினைக்கறேன். அந்த வகை யில சுரேஷ்கோபி மறைமுகமா மற்றொரு சேவை பண்ணியிருக்கார்!"

"நீ ஒரு சேவை பண்றியா?"

"யாருக்கு?"

"தமிழ் சினிமா தயாரிப்பாளர்களுக்கு. பாருய்யா... ஹீரோயின்களுக்கு வைக்க நல்ல பேர்கள் கிடைக்காம ரொம்ப சிரமப்பட றாங்க. கடந்த ரெண்டு மூணு மாசத்துல புதுசா வந்திருக்கற ஹீரோயின்கள் பேரைக் கேட்டால் மிரண்டுடுவே."

"சொல்லு சொல்லு!"

"'செல்வா' படத்துல விஜய்க்கு ஜோடியா ஒரு புதுமுகம். பேரு ரீவா. புதையல் படத்துல வர்ற ஹீரோயின் பேரு சாக்ஷி. ரீத்துன்னு ஒரு பொண்ணு. ரட்சனான்னு ஒரு பொண்ணு..."

"நான் சில நல்ல பேர்கள் சொல்றேன். யாராவது கேட்டா கருணை கூர்ந்து சொல் விடு. அமுல், ரெக்ஸோனா, குட்டிகுரா, குளோஸப். பெப்ஸோடெண்ட்...."

"எங்கியோ கேட்டாப்பல இருக்கே?"

"உன்னைத் தூக்கி கூவத்துல போட. வெறுப்பேத்தாம விடு போய்ச் சேருய்யா..."

— கிச்சா

## Make your Money work for you with Sindhoori Deposit Schemes




### HIGHLIGHTS

- Free Master Health check-up at Apollo Hospitals.
- Personal Accident coverage for the first named depositor.
- Concessional terms on Car financing.
- Postdated interest warrants along with Deposit Receipt.
- Outstation repayments will be made by way of demand draft.
- Outstation cheques accepted at par.
- CARE Rated Company.

### SCHEME I FIXED DEPOSITS

| Period of Deposit | Rate of Int. per annum | |
|---|---|---|
| | Monthly | Quarterly |
| 12 months to 60 months | 15% | 15.19% |

### SCHEME II CUMULATIVE DEPOSIT

| Period of Deposit | Maturity amount on every Rs. 3000/- of deposit | Effective Annual yield |
|---|---|---|
| 1 Year | 3,482 | 16.08% |
| 2 Years | 4,042 | 17.37% |
| 3 Years | 4,692 | 18.80% |
| 4 Years | 5,446 | 20.38% |
| 5 Years | 6,321 | 22.14% |

*For full text under Non-Banking Financial Companies & Miscellaneous Non-Banking Companies (Advertisement Rules 1977) refer advertisement released in the Trinity Mirror & Makkal Kural on 18-10-95*

**OM SINDHOORI CAPITAL INVESTMENTS LTD.**

**A Part of the Apollo Hospitals Group**

**Registered Office:** Ali Towers, 22, Greams Road, Madras - 600 006. Ph: 8233702, 8233680.
**Branch Offices :** Bangalore - Ph: 2281529 Cochin - Ph: 368401, Hyderabad - Ph: 316335.
(Applications are also accepted at the offices of the various Managers to the Scheme)

# குறையொன்றுமில்லை

கூர்மாவதாரமும் விச்வ சப்தத்தினாலே அறியப்படுகிறது. கூர்ம ரூபதாரியான விச்வம்.

கூர்மமாக (ஆமையாக) அவதாரம் பண்ணி, மந்த்ர பர்வதத்தைத் தாங்கிப் பிடிக்கிறான். தேவாசுரர்கள் கடைகிறார்கள். அந்தக் காட்சியை மஹரிஷிகள் பார்க்கும்போது தேவாசுரர்கள் அவர்களின் கண்களுக்குத் தெரியவில்லை. பகவானே கடைவதாகத்தான் தெரிகிறது. அவ்வளவு சிரமப்பட்டுக் கடைகிறானாம்... வியர்வையெல்லாம் கொட்டுகிறதாம் அவனுக்கு...!

இந்தக் காட்சியை திருமங்கையாழ்வார் வியந்து பாடியிருக்கார்.

எதற்காக இந்தச் சிரமம்? ஏன் இப்படிக் கடைய வேண்டும்?

உலகத்திலே வேறொருத்தருக்காக ஒரு காரியம் பண்ணுவதென்றால் அது ஒரு மாதிரி... ஆனால் அதையே தனக்காகப் பண்ணிக் கொள்வது என்றால் அதிலே ஒரு அவசரம் இருக்கும். மற்றவருக்காகப் பண்ணக்கூடியதை 'அடுத்த மாசம் பண்ணிக்கலாம்' என்பவர் கூட, அதில் தனக்கொரு லாபம் இருந்தால் 'இப்பவே பண்ணிடலாமே...' என்பார்! அதைத்தான் செய்தான் பரமாத்மா!

பரமாத்மாவுக்கு என்ன லாபம்...? தேவதைகள் அமுதுண்ண, அந்த அமுதில் வந்த பெண்ணமுதுண்டான் பரமாத்மா. தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்துவிட்டு, அந்த அமிர்தத்துடன் வந்த மஹாலக்ஷ்மியை, தான் அடைந்தான்.

லக்ஷ்மியை அடைவதற்கு பரமாத்மா பரிசிரமப்பட்டான். அந்த கூர்மாவதாரத்திலே அவன் லக்ஷ்மியோடவே காட்சி தந்தான். அவ்வாறு ஸ்ரீயோடு (லக்ஷ்மியோடு) விளங்கும்படியான அவதாரமானவன் - கூர்மரூபதாரி - அவன் யார் என்றால், அவனே விச்வம்.

'பேராயிரமும் திருவும் பிரியாத நாராயணன் அருள்பெற்ற நாம்' என்கிறார் சுவாமி தேசிகன். பரமாத்மாவானவன் ஆயிரம் திருநாமங்களையும் மஹாலக்ஷ்மியையும் பிரியாதவன்.

மஹாவராஹ: விச்வாத்மா! விச்வத்துக்கெல்லாம் அந்தராத்ம ரூபியாய் இருக்கக்கூடியவன் மஹா வராஹ (பன்றி) ரூபியாய் அவதாரம் பண்ணிய அதே பரமாத்மாதான்.

விச்வத்துக்கு அந்தராத்மா அந்த வராஹப் பெருமாள் என்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. வராஹ அவதாரத்தை மட்டும் 'விச்வாத்மா' என்று சொல்வது வழக்கம். எல்லார் க்ஷேமத்தையும் உத்தேசித்து, பேசிய அவதாரம் இந்த அவதாரம். அதனாலே இது எல்லாவற்றைக் காட்டிலும் பெரியது. வெண்பா பாடுவதிலே வல்லவரான பொய்கையாழ்வார், 'பிரான் உன் பெருமை பிறரார் அறிவார்!' என்று பாடியிருக்கிறார்.

'இந்த ஆழ்வாருக்கு என்ன கர்வம்! அவர் ஒருவர்தான் பகவானின் பெருமை உணர்ந்தவரா? இவ்வளவு கர்வமாய் அவர் பேசுவது பாவ்யமா' என்றெல்லாம் கேட்கத் தோன்றும். 'கர்வப் பேச்சு பிறருக்கு உபதேசம் ஆகுமா...?' என்று சந்தேகம் வரும்.

ஆனால் ஆழ்வாரின் சாத்வீக பாவம்தான் இதில் தெரிகிறது. ஏனென்றால், 'உன்னைத் தவிர உன் பெருமையை யார் முழுதும் அறிவார்' என்பதுதான் அதன் பொருள்.

பூதத்தாழ்வாரோ, மஹாலக்ஷ்மியிடம், 'அம்மா உன் பெருமையை உன் வல்ல

14



முக்கூர் லக்ஷ்மிநர

பனான நாராயணன் கூட உணர மாட்டான்; ஏன் நீயே உணர மாட்டாய்' என்று பாடுகிறார்!

உலகத்திலே திரிவிக்கிரம அவதாரம்தான் மிகப் பெரிது என்று நாம் நினைக்கிறோம். லோக மெல்லம் அளந்து நின்றானே, அந்த பிரும்மாண்ட ரூபத்தைத்தானே எல்லோரும் பெரிது என்று கொண்டாடுவோம்...! ஆனால் அந்த திரிவிக்கிரம அவதாரத்தை விட பெரியது வராஹ அவதாரம் என்பது யோசித்தால் புரியும். அதனால்தான் 'உன் பெருமையை யாரும் உணர முடியாது' என்று அவ்வவதாரத்தைப் பாடுகிறார் ஆழ்வார்.



வராஹ அவதாரம் எப்படி மற்றவற்றைக் காட்டிலும் பெருமை வாய்ந்ததாகிறது?

எந்த உலகத்தை அளப்பதற்காக பரமாத்மா திருவடியைத் தூக்கி வைத்தானோ, அதே உலகமானது இந்த வராஹ அவதாரத்திலே பகவானின் மூக்கிலே ஒட்டிக் கொண்டிருக்கிறது! ஏதோ சிறு அழுக்கு போல் துளியூண்டு ஒட்டிக் கொண்டிருக்கிறது! உலகையே மூக்கின் மேலே தரிக்கிறான்!

அதனால்தான் ஆண்டாள் சொல்கிறாள் :

பாசிதூர்த்துக் கிடந்த
 பார்மகட்குப் பண்டொருநாள்
மாகடம்பில் நீர்வார
 மானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர்
 திருவரங்கச் செல்வனார்
பேசியிருப்பனர்கள்
 பேர்க்கவும் பேராவே.

மானமிலாப் பன்றியாம்! அப்படியென்றால் என்ன...?

'வெட்கத்தை விட்டு, பகவான் நாராயணன் பன்றியாக அவதாரம் பண்ணினான்...' என்று வியாக்யானம் (விளக்கம்) சொன்னார் ஒருத்தர்! சொல்லலாமா அப்படி...! 'மானமிலா' என்றால் 'அளவில்லாத' 'எவ்வளவு பெருமை

ம்மாச்சார்யார்

யுடையது என்று நிர்ணயிக்க முடியாத...' என்று அர்த்தம். அப்படிப்பட்ட மஹாவராஹம் அது! தாமரை புஷ்பம் போன்ற அதன் திருநேத்திரங்களே (கண்களே), அது நாராயணன் ஸ்வரூபம் என்று 'கோள்' சொல்லிக் காட்டிக் கொடுத்து விடுகின்றன!

அந்த வராஹ அவதாரிதான் விச்வாத்மா – ஜகத்துக்கெல்லாம் தலைவன்!

நான்கு வேதங்களையும் நான்கு தமிழ்ப் பிரபந்தங்களாக மாற்றிக் கொடுத்த நம்மாழ்வார், திருவிருத்தம் என்கிற முதல் பிரபந்தத்தை முடிக்கிற சமயத்திலே வராஹ மூர்த்தியைத் தான் தியானம் பண்ணுகிறார். 'அந்த வராஹ மூர்த்தியை விட்டால் நமக்கு வேறு கதி ஏது?...' என்கிறார்.

எப்படி, எந்த வகையிலே உயர்ந்தது இந்த அவதாரம்?

விஷ்ணு சஹஸ்ரநாமத்திலே பிற்பகுதியில் 'மஹா வராஹோ கோவிந்தா' என்று வருகிறது. அதையேதான் சஹஸ்ரநாமத்தின் ஆரம்பத்தில் வரும் விச்வ சப்தமும் சொல்கிறது.

ஹிரண்யாக்ஷனை சம்ஹாரம் பண்ணிய பரமாத்மா, பூமி பிராட்டியை எடுத்துக் கொண்டு, மேலே வருகிறான். கண்களை உருட்டுகிறான்; சப்தித்துக் கொண்டு வருகிறான். பூமி பிராட்டி அந்த நேரத்திலே அழுது கொண்டிருக்கிறாள்!

பகவானுக்கு ஒரே வருத்தம்! 'காப்பாற்றுகிற நேரத்திலே அவள் அழுது கொண்டிருக்கிறாளே! உலகில் யாராவது கிணற்றில், பள்ளத்தில் விழுந்தவர்களைத் தூக்கிவிட்டால் அழுவார்களா...? தூக்கிவிட்டவர்களைக் கொண்டாடி மகிழ்வதல்லவா வழக்கம். பிராட்டி இப்படி ஏன் அழுகிறாள்...?'

"நீ சந்தோஷப்பட வேண்டிய நேரத்திலே இப்படி அழலாமா?" என்று கேட்கிறார் பகவான்.

அதற்குப் பிராட்டி கேட்கிறாள் : "நான் கூக்குரலிட்டு அழுதபோது ஓடோடி வந்து ரக்ஷித்தீர்கள். நான் உங்கள் பார்யை (மனைவி), சிஷ்யை, பத்னி என்பதால் வந்தீர்கள். இந்த பூமியிலே இருக்கிற ஜீவன்கள் கூப்பிட்டால் வருவீர்களா? என்னை ரக்ஷித்த மாதிரி இவர்களை ரக்ஷிப்பீர்களா...?" என்று கேட்கிறாள்!

எத்தனை வித ரூபங்களில் பகவான் வந்தாலும் அவன் பேசுகிற பேச்சிலே மாற்றம் கிடையாது. பூமி பிராட்டிக்குப் பதில் சொன்னான் பரமாத்மா.

"ஒருத்தனுக்கு மனம் தெளிவாக, அலைபாயாமல் விகாரமில்லாமல் இருக்கிறபோதே – சின்ன வயதிலேயே மனத்தில் காமம் புகாத நிலையிலே, இந்த்ரியங்கள் சரியாக இயங்கும் நிலையிலே, என்னுடைய விச்வரூபத்தை எவன் உணர்கிறானோ, என் திருவடியிலே எவன் ஒரு புஷ்பத்தைப் போட்டு அர்ச்சனை பண்ணுகிறானோ, எவன் என் திருநாமத்தை வாய்விட்டு உரக்கச் சொல்கிறானோ, என் திருவடியிலே எவன் ஆத்ம சமர்ப்பணம் பண்ணுகிறானோ... அவன் அழைக்கும் போது நான் ஓடோடி வருவேன்..."

அந்திம காலம் என்பது மனிதர்களுக்கு எப்படி இருக்கும்... கல் கட்டை மாதிரி விழுந்து கிடக்கும் நிலை வந்து விடும். அப்போது சரணாகதி பண்ண முடியுமா? சுற்றம் அவனைச் சூழ உட்கார்ந்து, 'சொல்லு, சொல்லு, நீ பொருள் வைத்திருக்கிறாயா? சொல்லு...' என்று கேட்டுத் துளைக்கும்.

அவன் இதற்குப் பதில் சொல்வானா? இல்லை 'நாராயணா!' என்று பகவான் நாமத்தைச் சொல்லுவானா? இத்தனை நாள் ஓடி உழைத்துப் பொருள் தேடியும் அதை எங்கே வைத்தோம் என்று அவனுக்கு நினைவு வரவில்லையே... அந்தச் சமயத்திலே பகவான் திருப்பெயரை அவன் எப்படிச் சொல்வான்...?

ஆகையினாலேதான், அதற்கு முன்பே மனத்திலே எம்பெருமானை பிரதிஷ்டை பண்ணி, அவன் திருவடியிலே பக்தியாகிற புஷ்பத்தை இட்டு வணங்க வேண்டும். ஏனென்றால் அந்திம காலம் என்பது ஒவ்வொருத்தருக்கும் கட்டாயம் உண்டு. அது நமது கட்டுப்பாட்டிலே இல்லை...

ஒருவர் தம் மனைவியிடம் குடிக்க தீர்த்தம் கேட்டார். அவள் கொண்டு தருவதற்குள் காலமாகி விட்டார்! சடங்குகளெல்லாம் நடந்து அவரை எடுத்துச் செல்ல சித்தமானபோது, திடீரென்று உயிர் திரும்பியது போல் கண் விழித்து 'நான் எங்கே இருக்கேன்? இங்கே என்ன நடக்கிறது...?' என்று கேட்டார்!

எனவே, உயிர் போவதும் வருவதும் நம் கட்டுக்குள் இல்லை என்பதாகிறது.

அதனால்தான் இளமையிலேயே பகவான் நாமாவைச் சொல்ல வேண்டும் என்கிறான், என் திருவடியில் ஆத்ம சமர்ப்பணம் பண்ணினவனைக் கைவிடேன் என்கிறான். 'அவ்வாறு செய்பவன் என் பக்தன்; அவனை நான் ஒரு நாளும் கைவிடேன்; நானே வந்து அவனை உத்தம கதிக்கு அழைத்துப் போவேன்' என்கிறான்.

எம்பெருமானின் அப்படிப்பட்ட வாக்கு இந்த வராஹ அவதாரத்திலே வெளிப்பட்டதினாலே, அது பெருமையும் சிறப்பும் மிக்க அவதாரம். அந்த வாக்கை பூமி பிராட்டி மூன்று முடிச்சுகளாக முடித்து வைத்துக் கொண்டாளாம்; புஷ்பம் அர்ச்சித்தல், ஆத்ம சமர்ப்பணம், திருநாமம் சொல்லுதல் என்ற மூன்றுக்கும் மூன்று முடிச்சு...

பகவானின், இந்த மூன்று கட்டளைகளைத் தான் அவள் ஆண்டாள் அவதாரத்திலே நடத்திக் காட்டினாள்.

(தொடரும்)

# பணத்திற்கு கைகள் இல்லை. ஆனால் அதையே உங்களுக்காக உழைக்க வைக்கும் எங்கள் கைகள்.

நீங்கள் கடுமையாக உழைத்து சம்பாதித்த ஒவ்வொரு காசையும் உங்களுக்காக, உங்களது வளமான எதிர் காலத்திற்காக உழைக்க வைப்பதையே தனது குறிக்கோளாகக் கொண்டது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'. 20 வருட அனுபவமும், ரூ.100 கோடிக்கு மேல் வியாபாரமும் உடைய 'ஷாஸன் குரூப்'பின் ஒரு அங்கமான 'ஷாஸன் ஃபைனான்ஸ்'ஸில் முதலீடு செய்வதன் மூலம் உங்கள் பணம் நம்பகமான, பாதுகாப்பான கைகளைச் சென்றடைகிறது. ஏனெனில் அனுபவச் செறிவும், இளமையின் துறுதுறுப்பும் உடைய எங்களால் பணத்தைப் பெருக்குவதற்கான வாய்ப்புகளையும், பாதுகாப்பையும் அளிக்க முடியும். இதனை உறுதி செய்யும் வகையில், அசலைத் திருப்பிக் கொடுப்பதிலும், உரிய நேரத்தில் வட்டி வழங்குவதிலும் போதிய பாதுகாப்பிற்கு CARE நிறுவனத்தாரின் மதிப்பீடு பெற்றுள்ளது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'. சேவையிலாகட்டும், உத்திரவாதத்தை உறுதி செய்வதிலாகட்டும் தனது வாடிக்கையாளர்கள் எப்போதும் சிறந்தவற்றையே பெறுதல் வேண்டும் என்பதில் உறுதியான நம்பிக்கை கொண்டது 'ஷாஸன் ஃபைனான்ஸ்'.






## ஷாஸன் ஃபைனான்ஸ் லிமிடெட்

**நிர்வாக அலுவலகம் :** 21, கோபால கிருஷ்ணா ரோடு, தி.நகர், சென்னை - 600 017.
போன் : 8281138
**டெபாசிட் மையம் :** 2, துரைசாமி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.
போன் : 4347128, 4348930, 4348931.
**கோயம்புத்தூர் :** சேரன் டவர்ஸ், 80/27, முதல் மாடி, அரசு கலைக் கல்லூரி ரோடு, கோயம்புத்தூர் - 641 018. போன் : 201256.
**பாண்டிச்சேரி :** 2வது மாடி, நெ.80, காமராஜ் சாலை, பாண்டிச்சேரி - 605 011.
**திருச்சி :** 5வது மாடி, கணேஷ் காம்ப்ளெக்ஸ், நெ.6-A, லாசன்ஸ் ரோடு, கண்ட்டோன்மெண்ட், திருச்சி - 620 001.
**மதுரை :** ஜூலைஹா பில்டிங், 26A மேற்கு ஆவணி மூல தெரு, மதுரை – 625 001.
**சேலம் :** 5/271B, ஜங்ஷன் மெயின் ரோடு, முதல் மாடி, ஜந்து ரோடு, சேலம் – 636 004
**கொச்சி :** பிளினஸ் கம்யூனிகேஷன் சென்டர், சிராமல் சேம்பர்ஸ், குரிஷீபள்ளி ரோடு, ரவிபுரம், கொச்சி -682 015. போன் : 365492, 369627.
**பெங்களூர் :** பிரனெவ் காம்ப்ளெக்ஸ், நெ.3, 5வது கிராஸ், மல்லேஸ்வரம், பெங்களூர் -560 003.

Insight-360

### வாடிக்கையாளரின் திருப்தியே எமது முயற்சியின் குறிக்கோள்

சட்டபூர்வமான ஃபிக்ஸட் டெபாசிட் விளம்பரம் 8.7.96 தேதியிட்ட "[illegible]" மற்றும் "[illegible]" நாளிதழ்களில் வெளியிடப்பட்டுள்ளது.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – ரூ. 500 பரிசு பெறும் மூன்றாம் பரிசுக்கதை – 1

# எல்லாமாய் நீ இருக்கையில்...

பட படவென்று ஒரே சீராய், பள்ளிக் குழந்தைகளின் சீருடை அணிவகுப்பாய் எழுந்த கரவொலி அடங்க வெகுநேரந்தான் ஆயிற்று.

மேடையில், பளிச்சென சிரித்தபடி மத்திய இணை அமைச்சரின் கையால் பரிசினை பெற்றுக் கொண்டிருந்தான் மாதவன். பொறியியல் கல்லூரியில் இறுதியாண்டு படிக்கும் அவன், ப்ராஜெக்ட் வொர்க்கிற்காய் செய்த ஒரு சோதனை முயற்சி, சாதனையாய் அமைந்து விட, இதோ இந்த பாரிசளிப்பு விழா.

மேடையில் நின்ற மற்றவரிடமிருந்து ஏதோ வகையில் அவன் வித்தியாசப்பட்டு நிற்பதாய்த் தோன்றியது பார்வதிக்கு. அவன் தலையைச் சுற்றி ஓர் ஒளிவட்டம் சுழல்வதாய்க் கூட பிரமையேற்பட்டது.

எப்பேர்பட்ட பிள்ளை இவன்! நினைக்க நினைக்க மனம் பெருமையில் பொங்கியது.

மலர்ந்தும் மணக்கவில்லை. சுகமேதும் கசிக்கவில்லை. பத்து மாதம் சுமக்க வில்லை. வலியில் அரற்றவில்லை. மணியாய் பிள்ளை மடியில்... எத்தனை கொடுத்து வைத்தவள் நான்... கண் சட்டென்று கலங்கியது. உணர்ச்சிப் பெருக்கில் உதடு நடுங்க, கை ஆதரவு நாடி, நாற்காலியின் முனையை இறுகப் பற்றியது.

'பலவீன மனத்தின் அறிகுறிதான் கண்ணீர்' காலண்டரில் என்றோ, எங்கோ படித்த வாசகம் நினைவில் வந்தது. வாழ்வில் இடிகளையே சந்தித்து மரத்துப் போன மனத்தில் பலவீனமா? ம்... உதடுகள் விரக்தியில் கேலியாய் நெளிய உள் மனம் கேலி செய்தது. "அடி பைத்தியமே, மனம் துக்கத்தில் மட்டுமல்ல, தாங்க முடியாத சந்தோஷத்திலும் கூடத்தான் பலவீனப்படுகிறது. இது உனக்குத் தெரியாதா?"

உண்மைதான். மனம் நெஞ்சு கொள்ளா பூரிப்பிலும் தான் பலவீனப்படுகிறது. தனக்குத் தானே போட்டுக் கொண்ட வேலியை விடுத்து, பகிர்ந்து கொள்ள ஆள் தேடி அலைகிறது.

திடீரென்று எல்லோரும் தன்னையே பார்ப்பது போல் உணர்வு எழ விழித்துக் கொண்டாள். ஆம்... எல்லோரும் இவளையே தான் பார்த்துக் கொண்டிருந்தனர். சூழ்நிலை புரியவே சில நிமிடம் பிடித்தது அவளுக்கு. பரிசு பெற்றதற்கு நன்றி சொல்ல வந்த மாதவன் இவளைப் பற்றி ஏதோ சொல்லியிருப்பான் போலிருக்கிறது. இவள் திடுக்கிட்டு விழிப்பது கண்டு அவன் மீண்டும் அழுத்தமாக, "எல்லாத்துக்கும் காரணம் என் அம்மாதான்." குரல் கரகரக்க அவன் சொல்லி முடிக்க, கூட்டம் புது மரியாதையுடன் இவளைப் பார்த்தது.

சபை மரியாதைக்காக கூச்சத்துடன் அவள் எழுந்து நின்றாள். உணர்ச்சிப்பெருக்கில் கைகளும், கால்களும் படபடவென்று ஆட, உதட்டை

சாந்தி குமார்
(அறிமுக எழுத்தாளர்)

இறுகக் கடித்துக் கொண்டாள். மேடையி லிருந்து இவளையே பார்த்துக் கொண்டிருந்த மாதவன் "ஈஸி... ஈஸி" என்பது போல் கண் களை ஒருகணம் மூடித் திறந்தான்.

அவனை அந்தக் கோலத்தில் பார்த்த பார்வதிக்கு, எப்போதும் தோன்றும் உணர்வு இப்போதும் மின்னலாய் நெஞ்சில் வெட்டி யது. இவன் எப்படி... பேச்சு, செயல், சிந்தனை, நடை, உடை, பாவனை என அனைத்திலும் அச்சு அசல் ரமணனாய்... இது எப்படி சாத்தி யம்?

பலமுறை சொல்வதால் பொய்யே, மெய்யாய்த் தோன்றுவது போல், திரும்பத் திரும்ப நினைப்பதால் பிரமையே நிஜமாகி விடுமா என்ன? ஆச்சரியமாகத்தான் இருந்தது.

விழா முடிந்து ஆட்டோவில் வீடு திரும்பும் போது, முகத்தில் ஜில்லென்று வந்து மோதும் எதிர்க்காற்றாய், ரமணனின் ஞாபகம் நெஞ்சில்



"என் பையனுக்கு விஷமம் ஜாஸ்தி..."
"எப்படி சொல்றீங்க?"
"தேதி காலண்டரை மொத்தமாகக் கிழிச்சிட்டு, 'காலத்தை வென்றவன் நான்...நான்'னு பாடறான்!"
– இரா. இரமேஷ்பாபு

அலைமோதியது. திருச்சி தெப்பக் குளமும், பர்மா பஜாரும், உச்சிப் பிள்ளையார் கோவி லும், காவிரிப் பாலமும் கண்முன் விரிந்தன.

ரமணன்... பார்வைக்கு வெகு சாதா ரணன். ஆனால் அறிவுஜீவி. எப்போதும் கண் களில் ஒரு கூர்மை மின்னும். கல்லூரிகளுக் கிடையே நடைபெற்ற ஒரு விழாவில்தான் முதல் சந்திப்பு நிகழ்ந்தது. எல்லாப் போட்டி களிலுமே தன் திறமையைக் காட்டியிருந்தான் அவன்.

குடும்பத்திலேயே, ஏன் பரம்பரையிலேயே முதல் ஆளாய் கல்லூரியில் காலடி எடுத்து வைத்திருக்கும் இவளுக்கு, அவனின் திறமை பிரமிப்பையும், இவளின் பிரமிப்பு அவனுக்கு ஆச்சரியத்தையும் ஏற்படுத்தியது. இவளின் குழந்தைத்தனத்தால் அவனும், அறிவுத் தாகத்தால் இவளும் ஈர்க்கப்பட, நட்பு வெகு வேகமாய் காதலாய்க் கனிந்தது.

அப்போதுதான் அந்தப் பேரிடி விழுந்தது அவன் தலையில்.

கல்லூரித் தேர்விற்கென வெகு வேகமாய் சாலையைக் கடந்த ரமணனின் கண்களில், எதிரே அசுர வடிவில், புயல் வேகத்தில் வந்த லாரியும், குறுக்கே அழுதபடி ஓடிவந்த அம் மணக் குழந்தையும் பட்டுவிட, குழந்தையைக் காப்பாற்றப் போனவன், போயே விட்டான்... கூழாய், குழந்தையை மட்டும் காப்பாற்றி விட்டு!

செய்தி கேட்டதும் துடித்துத்தான் போனாள் பார்வதி. ஓடிப் போய் அவன் மேல் விழுந்து கதறிட துடித்தாள். வேகமாய் வந்த வளின் கால் வாசற்படியில் தடுக்கியது.

விழப் போனவளை தாங்கிப் பிடித்தாள் அக்கா. முன்தலை நரைக்கத் துவங்கிய வயதில் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருப்பவள். இப் போதுதான் புன்னகை இவள் முக விலாசத் தைத் தெரிந்து கொண்டிருக்கிறது. அதற்கடுத் தாற்போல், அடுத்த அக்கா, லைன் கிளியராகி விட்ட மகிழ்ச்சியில் நிம்மதிப் பெருமூச்சுடன்.

மைகாட்! என்ன காரியம் செய்ய இருந் தேன் நான்! என் உணர்ச்சிகளுக்கு மட்டும் மதிப்புக் கொடுத்து நான் அங்கு சென்று எங்கள் உறவைச் சொல்லிக் கதறுவதால் என்ன என்ன விளைவுகள் உண்டாகும்?

"ஓ... தங்கச்சியே எவன் பின்னாடியோ சுத்திக்கிட்டு இருந்திருக்காப்பா; அக்காமார் லட்சணமெல்லாம் எப்படியோ? சும்மாவா கல் யாணம் இத்தனை நாள் தள்ளிப் போயிருக் கும்?" அக்காக்கள் கற்பும் இந்த விவஸ்தை கெட்ட உலகத்தால் விமர்சிக்கப்படும். கல்யா ணம் கூட நின்று விட வாய்ப்பு இருக்கிறது.

அத்துடன் ரமணனின் பெற்றோருக்கு எங்கள் உறவு இப்போது தெரிந்தால் எவ்வளவு அதிர்ச்சி உண்டாகும்? "ஏதோ பொம்பளை விவகாரம்பா; அதான் லாரி விட்டு அடிச்சுட் டான்" என்று மற்றவர்களால் அவனின் உயிர்த் தியாகம் கூட கொச்சைப்படுத்தப்படும்.

இவை எல்லாம் எதற்கு? எல்லாமாய் இருந்தவனே, இல்லாமல் போன பின், "அவன் என்னுடையவன்தான்" என்று ஊருக்குப் பறை யடித்து யாருக்கு என்ன இலாபம்? முதல் நாள் மாலை கூட கண்களில் பளபளப்புடன், எதிர் காலம் பற்றி அத்தனை உற்சாகத்துடன் பேசிய வன், இப்போது இல்லை என்றால் நம்ப முடிய வில்லையே. ஆனால் நம்ப முடியாதவை எல் லாம் நடக்கக் கூடாது என்று சட்டமா என்ன?

சட்டென்று வீட்டினுள் திரும்பி தனிமை யில் தன்னைக் கட்டுப்படுத்த முடியாமல் பொங்கிப் பொங்கி அழுதாள். கண்களே வற் றிய பின் நிதானமாய்ச் சிந்தித்து, திடமாய் ஒரு

# செய்திகள், வாசிப்பது செம்பியன்...



முதல்வருடைய படத்தை இலவச பஸ் பாஸில் அச்சிட்டது புத்திசாலித்தனமல்ல. இலவச பஸ் பாஸ் காரணமாக போக்குவரத்துத் துறைக்கு ஏற்படும் நஷ்டத்தை வரி செலுத்தும் மக்கள்தான் தாங்குகிறார்கள். ஏதோ முதல்வர் தாமே அளித்த நன்கொடை போல் தோன்றச் செய்வது தவறு. அரசு நிகழ்ச்சிகளுக்கு அழைப்பிதழ்களில் முதல்வர் படத்தைப் போடுவதை விட அசிங்கமானது. 'ஜெ' ஆட்சியில் நடந்த அநாகரிகங்கள் தொடரக்கூடாது. அமைச்சர்கள் முதல்வரைத் திருப்திப்படுத்த இதுவல்ல வழி. தங்கள் தங்கள் துறைகளில் ஊழலற்ற, சிறந்த நிர்வாகத்தை அளித்து முதல்வரை மகிழ்விக்கட்டும்.

"பழிவாங்குகிறார்களே!" என்று புலம்புகிறார் ஜெ. அ.இ.அ.தி.மு.க. ஆட்சியில் கொள்ளையடித்த அமைச்சர்கள் ஒருவர் பின் ஒருவராகக் கைதாக, வலை தம்மையும் சுற்றி வளைக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு, முன்னதாகவே பழிவாங்கல் பல்லவியை ஆரம்பித்திருக்கிறார். ஜெயலலிதா புரிந்துள்ள குற்றங்களுக்கு அவருக்கு தண்டனை கிடைத்தே ஆக வேண்டும்; அதே சமயம் பழிவாங்கல் போலவும் தோன்றக் கூடாது. இதற்கேற்ப அரசும் நீதித்துறையும் கண்டிப்புடன் கருணையும் காட்ட வேண்டும். இல்லையெனில் 'பழிவாங்கல்' என்ற பொய்ப் பிரசாரம் மக்களைக் கவர்ந்து விடுகிற அபாயம் உண்டு. கருணாநிதியே சொல்லியிருக்கிறார், "முன்னாள் முதல்வரைக் கூண்டில் நிறுத்த, அவர் கையெழுத்துப் போட்டிருக்கிற ஆவணங்களே போதும்" என்று. எனவே, இப்போதைக்கு மூன்று வழக்குகளில் சிக்கியுள்ள அவர் விஷயத்தில், சம்மன்ஸ் அனுப்புவது, ரிமாண்டில் வைப்பது, ஜாமீன் மறுப்பது போன்றவற்றில் சாணக்கியம் தேவை. எல்லாவற்றையும் விட முக்கியம், வழக்குகள் இழுத்தடிக்காமல் சட்டுப்புட்டென்று முடிவது.

'ரேஷனில் ஏழைகளுக்கு மட்டுமே மலிவான விலையில் உணவுப் பங்கீடு; மற்றவர்கள் அதிகப் பணம் தந்து பெற வேண்டும்' என்ற மத்திய அரசின் யோசனைக்கு முதல்வர்கள் மாநாடு ஆரம்ப கட்டத்திலேயே சமாதி கட்டி விட்டது. ரேஷன் பொருள்களை பணக்காரர்கள் வாங்க மாட்டார்கள். மத்தியதர வகுப்பினரும் ஏழைகளும்தாம். இதில் மத்தியதர வகுப்பினரை ஒதுக்குவது, அதிக அளவில் நேர்முக வரி செலுத்துகிற, அரசியல் போக்குகளை நிர்ணயிக்கிற, குடும்ப பட்ஜெட்டில் பற்றாக்குறை காண்கிற ஒரு சாராரை ஒதுக்குவதாகும். எனவே திட்டத்தை முதல்வர்கள் நிராகரித்ததில் வியப்பில்லை. மத்திய அரசு ஏழைகளுக்கு உதவ விரும்பினால், வேலை வாய்ப்புக்கள் மூலம் அவர்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முற்படுவதே சிறந்த வழி.

முதல்வர் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதைப் பார்க்க மகிழ்ச்சியாக இருக்கிறது. அவர் பேச்சைக் கேட்பது ஒரு இலக்கியத்தரமான நூலைப் படித்து முடித்த திருப்தியை அளிக்கும். ஆனால் துரதிர்ஷ்டம் என்னவென்றால், அவர் நேரம் பொன்னானது என்பதை உணராமல், அவர் முன்னிலையில் பேச பலரும் ஆசைப்பட்டு, பல சந்தர்ப்பங்களில் உளறிக் கொட்டி, நம் பொறுமையைச் சோதிப்பதுதான். மூன்று முதல் மூன்றரை மணி நேரம் முதியவரை (உள்ளத்தில் இளைஞர்தான் என்றாலும்) ஒரு நாற்காலியில் முடக்கி வைப்பது கொடுமை. முதல்வர் கலந்து கொள்ளும் எந்த நிகழ்ச்சியும் ஒரு மணி நேரத்தில் முடிய வேண்டும். அதில் அவருக்குப் பேச இருபது நிமிஷங்கள் ஒதுக்கப்பட வேண்டும். முதல்வருடைய நேரம் இன்று தமிழக மக்களின் உடைமையாகிப் போன விஷயம். அது வீணாகக் கூடாது. ஒவ்வொரு நிமிஷமும் தமிழகத்துக்குப் பயன் தர வேண்டும்.

கிளின்டனைக் கதாநாயகனாக்கி (பல இடங்களில் கேவலப்படுத்தி) நாவல் எழுதினார் ஒரு "நியூஸ்வீக்" நிருபர். எழுதியது யார் என்பதை மறைத்து "Anonymous" என்றே குறிப்பிட்டார். இப்போது உண்மை வெளியாகி, அவருக்கும் பத்திரிகைக்கும் ரொம்பத் தலைகுனிவு. எழுத்தாளர் பெயரை மறைத்ததினால் அல்ல; 'இவர்தான்' என்று சிலர் மர்மத்தை உடைத்த போது, புத்தகத்தின் விற்பனை கருதி, 'தாம் அல்ல' என்று மறுத்து, பொய் சொன்னதால்!

"நான் பள்ளியில் படித்த காலத்தில் ஆறாவது வகுப்பிலிருந்துதான் ஆங்கிலப் பாடம் கற்றுத் தருவார்கள். ஐந்தாம் வகுப்பு வரை எல்லாப் பாடங்களிலும் முதலிடம் பெற்று வகுப்பில் பளிச்சிட்டுக் கொண்டிருந்த நான், ஆறாவது வகுப்பிலிருந்து கொஞ்சம் தடுமாறித்தான் போய் விட்டேன். காரணம் ஆங்கிலம்! கணக்கு உட்பட அனைத்துப் பாடங்களிலும், கடினமாக முயற்சி செய்தாலும் ஆங்கிலத்தில் குறைந்த மார்க்தான். இதனால் ராங்க் காலை வாரிவிட்டு விடும்.

ஒன்பதாவது வகுப்பு படிக்கும் போது தந்தையார் இறந்து விட்டார். பின்னர் 'படிக்கிறாயா? கடையைப் பார்த்துக் கொள்ள வருகிறாயா?' என்று சித்தப்பா கேட்டபோது, சூழ்நிலை காரணமாக, சிறு வயதிலேயே தொழிலில் குதிக்க வேண்டியதாயிற்று. காலப்போக்கில் பல வர்த்தக அமைப்புகளுக்கெல்லாம் தலைவராக இருக்கும் வாய்ப்புக் கிடைத்தது. பல கருத்தரங்குகளிலும் கலந்து கொள்கிறேன். இருந்தும், சரளமாக ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்ற

## மனசுல இருந்தது கொட்டிட்டேன்....

என்னைப் பார்த்தவுடன் தடாலென்று காலில் விழுந்து விட்டார். '1962ல் நீங்கள்தான் சிபாரிசு செய்து மெடிக்கல் சீட் வாங்கித் தந்தீர்கள்' என்று அவர் சொன்னபோது, எனக்குக் கண்ணில் நீர் பனித்து விட்டது. என்னால் பெற முடியாத கல்வியை மற்றவர்கள் பெறட்டும் என்பதற்காகத்தான் ஒவ்வொரு



• நல்லி குப்புசாமி செட்டியார்...

# "நேர்மையும் நாணயமும் இல்லாதவர்களைக் கண்டால்..."

வருத்தமும் தொடர்ந்து கல்லூரிப் படிப்பு படிக்க முடியவில்லையே என்ற ஏக்கமும் இன்னமும் என் நெஞ்சின் ஓரத்தில் இருக்கத்தான் செய்கிறது. இதனால்தானோ என்னவோ, என்னிடம் கல்லூரி, பள்ளி, அட்மிஷனுக்காகச் சிபாரிசு வேண்டி வருபவர்களுக்கு எப்பாடுபட்டேனும் உதவி செய்வது என்று எனக்குள் ஓர் உத்வேகம் வரும். 90 சதவீதம் பேருக்கு வாங்கியும் கொடுத்து விடுவேன்.

அன்று ஒருநாள் கும்பகோணத்தில் ராயர் ஹோட்டலில் தங்கியிருந்தேன். சேலத்தைச் சேர்ந்த ஒருவர், என்னைச் சந்திக்க வந்தார்.

வருடமும், இந்த அட்மிஷன் விவகாரத்தைத் தலையாய கடமையாக நான் ஏற்றுக் கொண்டு செயல்படுகிறேன்.

இவற்றோடு, நாட்டிலுள்ள சிலர் கொஞ்சம் கூட நாணயம், நேர்மை இல்லாமல் செய்யும் காரியங்களைக் கண்டு பயங்கர எரிச்சலும் கோபமும் வருகிறது. ஆனால் தனிமனிதனாக நான் என்ன செய்ய முடியும்? என்றாலும் சமீபத்தில் நடந்த மாற்றம், மக்கள் விழித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்த்தி விட்டது!

- ப்ரியன்

வண்ணப்படம் : யோகா

# நீங்கள் கேட்டவை — தராசு

● வி. சத்தியப்ரியன், சென்னை – 15.
? ஜனதா தளத்திலிருந்து முஃப்தி முகமது சயீத் விலகியது பற்றி...?

! காங்கிரஸில் வேறு சேரப் போகிறாராம்! அப்புறம் காஷ்மீர் முதல்வராக வேண்டுமாம்! பகல் கனவுகளுக்கு யார் தடைவிதிக்க முடியும்?

● டி. மாணிக்கவேல், திருச்சி – 2.
? தி.மு.க.வே காமராஜர் ஆட்சியைத் தமிழ் நாட்டில் மலரச் செய்தால் அதை நான் வரவேற்பேன் என்று மூப்பனார் கூறியுள்ளது குறித்து...?

! ஆட்சியில் குற்றம் குறைகளைக் கண்டு பிடித்து வெளியிடுவதும், நல்லாட்சிக்கு வழிகள் கூறி நடத்திச் செல்வதும் எதிர்க்கட்சிகளின் கடமை. அதே சமயம் நல்லது நடந்தால், அதைப் பாராட்டுவது எதிர்க்கட்சிகளின் உயர்ந்த பண்பாடு. எனவே மூப்பனார் சொல்லியிருப்பதைப் பாராட்டலாம். சொன்னது நடந்து விட்டால் மேலும் பாராட்டலாம்.

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.
? தமது அடுத்த படம் குறித்து ரஜினி கடைப்பிடித்து வரும் சஸ்பென்ஸ் தேவை தானா?

! சஸ்பென்ஸ் உடைஞ்சு போச்சு! அவர் அடுத்த படத்துக்குத் தயாராகி விட்டார் சார். கதை, இயக்குனர் தேர்வு நடந்து வருகிறதே.

● இர. ரூபன், கோபாலசமுத்திரம்.
? ஊழலை ஒழிக்க கலைஞர் உயர்நிலைக் குழு அமைத்துள்ளாரே? உங்கள் அபிப்பிராயம்...?

! ஊழல் ஒழிப்பில் இரு அணுகுமுறைகள் உண்டு. முதலாவது, பிறருக்கு எடுத்துக் காட்டாக நேர்மையாக விளங்குவது; மீறி ஊழல் செய்பவரை கடுமையாகத் தண்டிப்பது. இரண்டாவது, ஊழல் நடக்கவே முடியாதபடி (அல்லது ஊழல் கணிசமாகக் குறையும்படி) நடைமுறைகள், விதிமுறைகளைத் திருத்தி அமைப்பது. முதல் அம்சத்தை கருணாநிதியே கவனித்துக் கொள்ளலாம். இரண்டாவது அம்சத்துக்குத்தான் உயர்நிலைக் குழு.

● ஏ. குமாரவேலு, பாளையங்கோட்டை.
? சசிகலா வழக்கில் அவரைக் கைது செய்யும்போது இருந்த பரபரப்பு அடங்கி விட்டதே. சர்க்காரியா கமிஷன் தீர்ப்புகள் போல் இதிலும் ஆகிவிடுமோ...?

! கமிஷன் தீர்ப்புக்கும் நீதிமன்ற நடவடிக்கைகளுக்கும் ரொம்ப வித்தியாசம் உண்டு. ஒப்பு நோக்க முடியாது. வழக்குகள் வேகமாக நகரவில்லை; ஊர்கின்றன என்பது ஒரு குறைதான். ஆனால் நீதி, நிதானமாகத்தான் செயல்படும் – செயல்பட வேண்டும் என்பது ஏற்கக் கூடியதே.

● ஆர். ராஜதுரை, சீர்காழி.
? ஜெயலலிதா முதலமைச்சராக இருந்த போது, 'கச்சத் தீவை மீட்பேன்' என்று சபதம் எடுத்தார். ஆனால் மீட்கவில்லை. கருணாநிதியாவது உரிய நடவடிக்கை எடுப்பாரா...?

! அப்போதும், இப்போதும், எப்போதும் அது மத்திய அரசின் கட்டுப்பாட்டில் உள்ள விஷயம். எனவே, இப்படியெல்லாம் கலைஞர் உளறவில்லையே என்று மகிழுங்கள்!

● ஈ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.
? "தாமரைக்கனி அன்போடு அடுத்த உறுப்பினரைத் தட்டுவதை அந்தக் காலத்தில் ஏற்றுக் கொண்டாலும் இந்தக் காலத்தில் ஏற்றுக் கொள்ள மாட்டோம்" என்று சபா நாயகர் பழனிவேல் ராஜன் கூறியுள்ளாரே!

! தட்டப்படக் கூடாதவரை தட்டக்கூடாத இடத்தில் தட்டப் போய்த்தான், பஞ்சாப்பில் பல சாதனைகள் புரிந்த கில், இன்று மூன்று மாதம் கடுங்காவல் தண்டனை பெற்றுள்ளார்! தாமரைக் கனியும் தட்டக்கூடாத விதத்தில் தட்டுபவர்தான். எனவே அவைத் தலைவரின் கண்டனம் சரியே.

● என். ஜெயராமச்சந்திரன், கோவில்பட்டி.
? 95 கோடி மக்கள் தங்கங்கள் இருந்தும் ஒரு தங்கம் கூட வாங்க முடியலையே?



• உப்புப் பெறுமா?

சசிகலா

! 95 கோடியையும் தங்கமாகக் கருதி அவற்றில் சிலவற்றையேனும் பாரதத்தாய் அணியக் கூடிய ஆபரணமாக உருமாற்றும் முயற்சி சிறிதும் இல்லையே!

● வி. முத்தையா, திருநெல்வேலி.
? பள்ளி திறந்து இரண்டு மாதங்களாகியும் இன்னும் சில பாடப் புத்தகங்கள் கடையில் கிடைப்பதில்லையே?

! கடந்த ஆட்சியின் மீது பழிசுமத்தி இந்த வருஷம் தப்பலாம்; அடுத்த ஆண்டு தாமதமானால் சால்ஜாப்பு கூற முடியாது. அன்பழகனார் இப்போதே சுறுசுறுப்புக் காட்டட்டும்.

● ப. வடிவேலு, சென்னை - 116.
? 'அறுபது லட்சம் ரூபாயில் கார் வாங்கியது உப்பு பெறாத விஷயம்' என்று நடராஜன் பேட்டி ஒன்றில் கூறியுள்ளாரே?

! நியாயம்தான்! கோடிகளில் திளைப்பவர்களுக்கு லட்சம் எந்த மூலைக்கு! ஆனால் நேர்மையாகச் சம்பாதிக்காத செல்வம் ஒட்டாது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
டி. கலைவாணி,
A/4, வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு,
தாந்தோன்றிமலை, கரூர் - 639 005.

● டி. கலைவாணி, கரூர். ❑
? கிரிமினல்களுக்கும் கு.க.வைக் கடைப்பிடிக்காதவர்களுக்கும் தேர்தலில் வேட்பாளராக நிற்கத் தகுதியில்லை என்று தேர்தல் சீர்திருத்த மசோதாவில் குறிப்பிடாமல் விட்டு விட்டார்களே?

! குறைந்தபட்ச செயல் திட்டம் வகுத்து, அதன்படி 'அனுசரித்து'ப் போகும் ஆட்சியில் இதெல்லாம் எப்படிங்க நடக்கும்...!

● என். சுப்பிரமணியம், குடந்தை.
? சட்டவிரோத ஆக்கிரமிப்பாளர்களுக்கு மாற்று இடம் தரப்படும் என்று தஞ்சை கலெக்டர் அறிவித்துள்ளது சரியா? ஏழைகள் என்பதால் குற்றத்தை மன்னித்து விடுவதா?

! சட்டவிரோதமான ஆக்கிரமிப்பு தவறுதான். ஆனால் பல ஏழைகள் இவ்வாறு ஆக்கிரமிப்புச் செய்து குடிசை போடுவதை மனிதாபிமானக் கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டும். அதிகார பலத்தால் வசதியுள்ளவர்கள் கூட ஆக்கிரமிப்புச் செய்கிறார்கள். அதைத் தண்டிக்கும் கண்ணோட்டத்துடன்தான் அணுக வேண்டும். ஏழைகள் பிழைப்புத் தேடி நகரங்களுக்கு வந்து சேர்கிறார்கள். தங்க இடமின்றித் தவித்து, குடிசை போடுகிறார்கள். இவற்றை அகற்றி, வேறு மாற்றிடத்துக்குக் குடியேற வசதி செய்து தருவது மனிதாபிமானம். பிழைப்புத் தேடி இங்கு வர அவசியமின்றி கிராமப் புறங்களிலேயே ஆண்டு முழுதும் வேலை வாய்ப்பும் நல்ல ஊதியமும் கிடைக்க ஏற்பாடு செய்வது நிரந்தரத் தீர்வு.

● மல்லிகை மன்னன்,
மதுரை - 14.
? 'மக்களால் வெறுத்து ஒதுக்கப்பட்ட இந்தக் கருணாநிதியே மீண்டும் ஆட்சியைப் பிடிக்கும் போது, நாங்களும் ஆட்சியைப் பிடிக்க முடியாதா?' என்று வாதாடுகிறாரே காளிமுத்து?

! ராஜீவ் மரணத்தையொட்டி தி.மு.க. மீது அபாண்ட பழி சுமத்தப்பட்டது என்பதை மக்கள் புரிஞ்சுக்கிட்டாங்க. அ.தி.மு.க. கேஸ் அப்படியில்லையே... சும்மா என்னுகிற கேஸாக அல்லவா இருக்கு!

● பாலாஜி, குடந்தை - 1.
? நூறு சினிமாவில் நடித்தவர்களுக்குக் கிடைக்கிற பெருமையும் அங்கீகாரமும் நூறு இலக்கியங்களைப் படைத்த எழுத்தாளர்களுக்குக் கிடைப்பதில்லை என்கிறாரே மூப்பனார்?

! சினிமாவிலும் சரி, எழுத்திலும் சரி, 'நூறு' என்பதே சாதனையாகிவிடாது! எண்ணிக்கையை விட தரமே முக்கியம். தரம் இருந்தும் பலர் கவனிக்கப்படவில்லை என்பதுதான் மூப்பனாரின் வருத்தம்.


• மீண்டும் முடியும்!


• உடைந்த சஸ்பென்ஸ்


• அந்த நாளும், இந்த நாளும்


• பகல் கனவு!


• தட்டியவரைத் தட்டி...!


• நியாயத் தீர்ப்பு

## வழக்கில் பரபரப்பு இல்லையே?

# 3

# உன்னை வேணாமா?

ஸ்ரீராம் பர்ஸைத் திறந்தான்.

"இரு இரு.... இந்த முறை நான் குடுக் கணும்....." அவனைத் தடுத்து, ஹேண்ட் பேகி லிருந்து ஐம்பது ரூபாய் நோட்டை உருவி வைத் தாள் சுகன்யா.

"கல்யாணம் ஆனப் புறம் இப்படி இருப்பியா சுகி...? 'இந்த முறை நான் அடுத்த முறை நீ'ன்னு பிரிச்சுப் பிரிச்சு பேசி..."

"இல்லை! இப்படியே இருக்க முடியாது. ஏன்னா, கல்யாணத்துக் கப்புறம் வேலையை விட்டுடப் போறேனே... அப்ப ஸ்டிக்கர் பொட்டு லேருந்து ரீடர்ஸ் டைஜஸ்ட் சந்தா வரைக்கும் எல்லாத்துக் கும் நீதான் பணம் தர ணும்!"

"நீ இப்படி முடிவு பண்ணியிருக்கேன்னு தெரிஞ்சா, ராஜு என் சீட்டைக் கிழித்தாலும் கிழிச்சிடுவார்.... அவருக்கு நீ இல்லாம ஒருநாள்கூட சரிப் படறதில்லை."

"பயப்படாதே! அவரை நான் ஏற்கெனவே எச்சரிக்கை பண்ணி வைச்சிருக்கேன்..."

-சில்லறையை எடுத்துக் கொண்டு எழுந்தாள்.

"எப்படி ஒத்துண் டார் உன்னை விட றதுக்கு?"

"ஹி இஸ் எ நைஸ் மேன்...எனக்குன்னு ஒரு வீடு, குடும்பம், அதுல இருக்கற சச்சரவு, சிரிப்பு, ஒட்டுதல், உர சல்கள் எல்லாத் துக்கும் ஒட்டு மொத்தமா நான் ஏங்கிக்கிட்டிருக் கேன்றது அவருக்குப் புரிஞ்சு போச்சு. நான் வந்து சேர்ந்த இந்த



இரண்டு வருஷத்திலே நம்ம கம்பெனியும், I improve, we solicit, for your kind consideration, at an early late ன்னு எழுதிண்டிருந்த பிரிட்டிஷ் கால ஆங்கிலத்தையெல்லாம் தூக்கி எறிஞ்சுட்டு, நவீனமா மாறிக்கிட்டிருக்கு...இன்னும் ஆறு மாசமானா என்னை மாதிரி ஒரு ஆளுக்கு அவசியமே இல்லாமப் போனாலும் போகலாம்...''

''அதனாலென்ன சுகி.. நீயும் ப்ரோகிராமிங் கத்துக்கோ... தொடர்ந்து வேலை பார்க்கலாமே...''

''வேண்டவே வேண்டாம்! இப்ப நான் பொறியலும், அவியலும் செய்யக் கத்துக்கற 'மூட்'ல இருக்கேன். டு ஹெல் வித் ஸாஃப்ட்வேர்! அதுதானே இன்னைக்கு உன் பொன்னான மாலை நேரத்தைச் சாப்பிடப் போறது.... அப்புறம் பாதி ராத்திரியையும் விழுங்கி ஏப்பம் விடப் போறது....!''

''ஆமாம்! ஃபேர்லஷண்ட்ஸ் வேலையை இன்னைக்கு எப்படியும் முடிச்சாகணும். சிவராத்திரிதான்...''

''நாளைக்கு இடுங்கின கண்ணோட சைனாக்காரன் மாதிரி வந்து சேருவே...''

''ஏன் உனக்கு சைனாக்காரங்களைப் பிடிக்காதா...?''

''ஓ! ரொம்பப் பிடிக்கும். அதைவிட சைனீஸ் ஃபுட் - அடுத்தமுறை நீ என்னை ஷாஸ் ரிலா கூட்டிட்டுப் போறே... சரியா...?''

''டன்! இப்ப நீ போய்ச் சேரு. வார்டன் அம்மா உனக்காக ஆசையா வாசல்லேயே காத்திருப்பாங்க...''

பெரிதாகச் சிரித்தான்.

''இந்த நகைச்சுவை உணர்வு மட்டும் இல்லைன்னா நாம என்ன பண்ணுவோம்...!''

''அதுக்குன்னு தனியா ஸாஃப்ட்வேர் தயாரிக்க முடியுமான்னு பார்ப்போம். அப்புறம் அதை வியாபாரமாக்கி உலகம் பூரா விக்கற முயற்சியில திருஸ்ரீராம் ராமநாதன் இரவு பகலா ஈடுபடுவார்...''

இப்போ அவன் சிரித்தான், பெரிதாக.

ஆட்டோ பிடித்துத் தந்து, அவள் மஞ்சள் புடைவை பளிச்சென்று மறைந்ததும் ஸ்ரீராம் மீண்டும் அலுவலகத் திசையில் போனான்.



''நீ போய்த் தூங்கேன் வசந்தி. நாளைக்கு காலேஜ் போக வேண்டாமா...?''

-பெண்டுலம் வைத்த கடிகாரம் பதினோரு மணி அடிக்கக் கேட்டுச் சொன்னார் ராமநாதன்.

வசந்தி மனமில்லாமல் எழுந்தபோது, ஹால் மூலையில் வளைந்து கண்ணயர்ந்திருந்த அம்மா அசைந்து கொடுத்தாள்.

''வசந்திம்மா, சமையல் மேடையைத் துடைச்சுட்டியா...? ரொம்ப அசதியாயிருக்கு...''

அசதி, உடல் அயர்வினால் மட்டுமில்லை, பிற்பகல் உடைந்த உண்மையை, முன்னிரவு வரை மனத்துக்குள்ளேயே போட்டுத் தனித் தனியே குமைந்து கொண்டிருக்கிறது வீடு.

தேவிபாலா ?

அதன் அழுக்குச் சுவர்களும் பூப்போட்ட பிளாஸ்டிக் திரைச் சீலைகளும் கூட களைத்துச் சோர்ந்ததுபோல் தோன்றியது அவளுக்கு.

சமையல் மேடையில் பொட்டுப் பொட்டாக தோசை மாவு சிதறிக் காய்ந்திருந்தது. அம்மாவின் இன்றைய மனநிலைக்கு இன்னொரு அடையாளம்... அடுப்பு சூட்டுக்கருகே விழுந்த புள்ளிகள் அழுத்தித் துடைத்தாலும் வெளிவர மறுத்தன.

"என்னவொரு பிடிவாதம்...! அண்ணாவைப் போல...! வசந்தி ஸ்பாஞ்சைத் தண்ணீரில் முக்கி ஒவ்வொரு காய்ந்த மாவுப் புள்ளி மீதும் பிழிந்து ஊற வைத்தாள்.

வழக்கமாக மூன்று நிமிடங்களில் முடியும் வேலை முழுசாகப் பதினைந்து நிமிடங்கள் எடுத்துக் கொண்டது.

மேடையில் அரிசி மாவால் கோல இழைகள் இழுத்து, நடுவே நட்சத்திரம் போட்டு மாவு டப்பியை மூடியபோது வாசல் கேட் திறக்கும் ஒலி... அண்ணாவின் கார்தான்..

வசந்தி அவசரமாக பூஜையறைக்குள் போய் கை கூப்பிக் கண் மூடினாள். 'அம்பிகே! இன்னைக்கு எது நடந்தாலும் தாங்கற சக்தியைக் கொடு... எனக்கு, அம்மாவுக்கு, அப்பாவுக்கு... அப்புறம் அண்ணாவுக்கு...'

**வ**ழக்கத்துக்கு மாறாய் வீடே விழித்திருந்து 'வரவேற்றதும்' ஸ்ரீராமுக்குப் புரிந்து போயிற்று. வசந்தி அவனை நேருக்கு நேர் பார்க்க மறுத்து, கண்களைத் தாழ்த்தி, ஓரமாய் நின்றாள். சுவரில் சாய்ந்து துக்கமே உருவாக அம்மா. அப்பா மட்டும் எப்போதும் உட்காரும் சாய்வு நாற்காலியில் வசதியாய்...

"போய் சாப்பிட்டுட்டு வா ஸ்ரீராம்! கொஞ்சம் பேசணும்..." பனிப்பாறை போல் இறுகின. குரலில் உணர்ச்சிகள் உறைந்து போய் ஒலித்தன.

சின்ன படுக்கையறையில் குமார் தூங்கிப் போயிருந்தான். ப்ரீஃப்கேஸை வைத்துவிட்டு, முகம் கழுவி, உடை மாற்றி வழக்கம்போல் பூஜையறையில் கண் மூடி ஸ்ரீராம் நின்றபோது, மனம் ஒரு நிலைப்பட மறுத்தது. இரண்டு நிமிடங்கள் முயன்று தோற்று, திருநீறை மட்டும் அணிந்து சாப்பாட்டு மேஜைக்கு வந்தான்.

விழித்திருந்தால் தவறாமல் பரிமாற வரும் அம்மா, இன்று அசையவில்லை. வசந்தி மட்டும் தம்ளரில் தண்ணீரை நிரப்பவிட்டு அகன்று கொண்டாள்.

அத்தனை இறுக்கத்திலும் அம்மாவின் கைப்பக்குவம், சுவை நரம்புகளைக் கடந்து மனத்தை வருடியது. தோசைகளின் ஓரம் வரை கவனமாகத் தடவி வைத்திருந்த மிளகாய்ப் பொடி, கத்திரிக்காய், முருங்கைக் காய் என்று கொத்தாக உள்ளடக்கிய ஒரு கிண்ணம் சாம்பார், தனியாகத் தோய்த்து வைத்த தயிர்.

சாப்பிடும் வரை ஒருவர் ஒரு வார்த்தை பேசப் போவதில்லை என்பது புரிய, அந்த ஏழு நிமிடங்களில் அப்பாவுடன் உரையாட மனத்துக்குள் ஒத்திகை நடத்தினான் ஸ்ரீராம்.

'நீங்க என்ன கேக்கப் போறேள்னு தெரியும் அப்பா...'

'என்ன தெரியும்?'

'வசந்தி சொல்லியிருப்பான்னு நினைக்கறேன்....'

'ஆமாம்! சொன்னா. இப்படி ஒரு காரியம் பண்ணுவேன்னு நான் துளியும் நினைக்கலை ஸ்ரீராம்! அது முதல் தப்புன்னா வசந்திகிட்டே சத்தியம் வாங்கிண்டு உண்மையை மறைக்கப் பார்த்தது அதைவிட தப்பு!'

'அப்பா! நான் எதையும் வேணும்னு மறைக்க நினைக்கலை. உங்களுக்கே தெரியும், நான் டிகிரி படிச்சப்பச்சே அந்த பித்துக்குளி ரோகிணி அச்சுபிச்சுன்னு 'லவ் லெட்டர் எழுதினாளே... உங்ககிட்டேதானே முதல்ல சொல்லி அட்வைஸ் கேட்டேன்?'

'அப்ப கேட்கத் தோணின மாதிரி, இப்ப தோணியிருக்க வேண்டாமா...? இறக்கை முளைச்சுப் போச்சு இல்லியா...?'

'கேக்கத் தோணலைன்னு இல்லப்பா... கேக்கறத்துக்கு அவகாசமோ, அனுமதியோ தராம காரியங்கள் தானா நடந்து போச்சு. அவ லவ் லெட்டரும் குடுக்கலை, நாங்க தனியா

**தங்க நகைப் பரிசு!**

இன்னும் 23 வாரங்கள் வெளிவரப் போகிற இந்தத் தொடர்கதை, வாராவாரம் ஓர் எழுத்தாளரின் பெயரில் வெளியாகும். ஆனால் முழுக்கதையையும் எழுதுபவர் ஒரே எழுத்தாளர்தான்! யார் அவர்?

வாரா வாரம் படித்து, யூகித்துக் கொண்டே இருங்கள். கடைசி வார அத்தியாயத்துடன் வெளியாகப் போகிற கூப்பனில், 'தொடரை எழுதியவர் யார்?' என்கிற உங்கள் யூகத்தை எழுதி அனுப்புங்கள். உங்கள் யூகம் சரியானதாக இருந்தால் உங்களுக்குத்தான் மின்னும் தங்க நகைப் பரிசு!

பலர் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறையில் ஓர் அதிர்ஷ்டசாலி தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

பேசணும்னு எந்த முயற்சியும் பண்ணவும் இல்லை...'

'இப்ப என்னங்கறே! அந்த மாதிரியெல்லாம் நடக்கலையேன்னு வேற குறையா இருக்கா...?

-கேட்கும்போது அப்பாவின் குரலில் எகத்தாளம் கத்திமுனையாக மின்னும்...

-நினைத்துக் கொண்ட ஸ்ரீராமுக்குப் புரையேறியது.... அவசரமாக இரண்டு மிடறு தண்ணீரைக் குடித்தான்.

'அந்தப் பொண்தான். நினைச்சுக்கறாளா இருக்கும்...' ராமநாதனின் எண்ணம் ஓடியது....

'என்ன சொல்லுவான்... மறைச்சது தப்பு தான்பா... வசந்தி கல்யாணத்தை உத்தேசித்து இப்ப அதைப் பத்திப் பேச வேண்டாம்னு இருந்தேன் என்பான்.'

'வசந்தி கல்யாணத்தைப் பத்தி அவ்வளவு அக்கறை இருந்தா இப்படி மனசை அலைய' விட்டிருப்பியா?... அந்தப் பொண்ணு இந்த வீட்டிலே மருமகளா எபபடிப் பொருந்துவானு நினைக்கிறே...?

'அப்பா! அவ நல்ல பொண்ணு...'

'என்ன நல்ல பொண்ணு? கல்யாணத்துக்கு முன்னாடி திருட்டுத்தனமா ஒரு ஆம்பிளையோட... வசந்தி சொன்னா, கார்ல பார்த்ததை. அதுக்கெல்லாம் தயாரா இருக்கறவ நல்ல பொண்ணா எப்படி இருக்க முடியும்? நீ மட்டும் என்ன, பேருக்கேத்த ஸ்ரீராமனாவா நடந்துண்டே....?'

-இருந்த நிலையிலிருந்தே மகனை நோட்டம் விட்டார் ராமநாதன். 'நான் எப்படி அவனை வாய்விட்டுக் கூப்பிடுவேன்? உங்க பேர்ல பாதியை வைக்கச் சொல்றேனே, என்று மனைவி ஆட்சேபித்ததையும் மீறி 'ஸ்ரீராம்' என்று பிடிவரதமாகப் பெயர் வைத்திருந்தார். ஆதர்ச புருஷன் ஸ்ரீராமன்! என் மூத்த மகன் அவனைப் போல் வலிமையாய், தாமரை இலைத் தண்ணீராய் பக்குவப்பட்டு, ஆன்ம பலத்துடன் வளர வேண்டும்.

அவனுக்காக அவர் கண்ட கனவுகள் எல்லாமே நிறைவேறிக் கொண்டுதான் வந்தன. இன்றைய செய்தி வெள்ளம் வந்து அத்தனையையும் அழித்துப் போட்டு விட்டதே!

அப்பாவின் பார்வை தன் மீது பதிவதை உணர்ந்து, அவர் இருந்த திசையை நோக்கினான் ஸ்ரீராம்.

சட்டென்று பார்வையைத் திருப்பிக் கொண்டார் அவர்.

'இப்படி எகத்தாளமா பேசாதீங்கோ அப்பா...' - ஸ்ரீராம் ஒத்திகை விவாதத்தை உச்சத்துக்கு வளர்த்துக் கொண்டு போனான்.

'சுகன்யாவும் நானும் ரொம்ப விரும்பறோம். ஆனால் உங்க ஆசிகளோட கல்யாணம் பண்ணிக்க எத்தனை நாள் வேணும்னாலும் காத்திருக்கத் தயார்'னு நான் பொய் சொல்லப் போறதில்லே... அதுக்கு முக்கியமான காரணம் அவளோட தனிமை, ஏக்கம்... அது தெரிஞ்சும் அவளைத் தொடர்ந்து தவிக்க வைச்சா அது நான் செய்யற பெரிய தப்பு...'

'நாளைக்கே போய் ரிஜிஸ்தர் மாரேஜ் பண்ணிக்கோங்க... நானா குறுக்கே விழுந்து தடுக்க முடியும்...?'

'இல்லைப்பா. ஒரு வருஷம் அவகாசம் கேட்டிருக்கேன். அதுக்குள்ளே வசந்திக்கு மாப்பிள்ளை பார்த்து முடிச்சு வைக்கறது என் பொறுப்பு. பாம்பே, ஹைதராபாத்துனு போகும்போது சந்திக்கிற நல்ல பையன்களை மனசுல வைச்சுண்டு தான் சொல்றேன்...'

'உன்னையும் நல்ல பையன்னுதான் நினைச்சேன் ஸ்ரீராம். நீ நல்ல பையன்கள்னு சர்டிபிகேட் குடுக்கறவங்க உன்னை மாதிரி திருட்டுத்தனம் பண்ணமாட்டாங்கன்னு என்ன நிச்சயம்...?'

'அப்பா, தயவு செஞ்சு எனக்குத் திருட்டுப் பட்டம் கட்டாதீங்க. நான் உங்ககிட்டேருந்து கொஞ்ச காலமா உண்மையை மறைச்சது தப்புதான். ஆனா நிச்சயமா ஏமாத்தணும்ங்கறதுக்காக இல்லை... நம்ம வீடு சுகியை ஒத்துக்க ரொம்ப கஷ்டப்படும்னு எனக்குத் தெரியும். அந்தக் கஷ்டத்தைக் குடுக்கறதுக்கு முன்னாடி நாம ரொம்ப முக்கியமா

**"அந்த போலீஸ்காரரோட காலுக்கு அடியில உட்கார்ந்து தப்பிச்சிட்டேன்."**

**"எப்படிண்ணே?"**

**"குனிந்து பார்த்தால் கூட அவருக்குத் தொந்தி மறைச்சிருமேப்பா!"**

*— சீர்காழி வி.ரேவதி*



நினைக்கற வசந்தி கல்யாணம்...'

'வீடு கஷ்டப்படும்னு தெரிஞ்சும் ஏன் மனசை அவிழ்த்து விட்டே...? அதுதான் எனக்குப் புரியலை ஸ்ரீராமா...'

'கரையில கட்டி வைச்ச படகை அவிழ்த்து விடற மாதிரி நான் மனசைத் தளர்த்தி விடலைப்பா.. எனக்கே தெரியாம ஒரு புயல் வந்து அதை அழச்சுண்டு போயிடுத்து... ஆனா அது போய்ச் சேர்ந்திருக்கிற இடம் அப்பழுக்கில்லாத பளிங்குப் பாறை. நீங்களே யோசிச்சுப் பாருங்கோ... இவ்வளவு வருஷமாக எத்தனையோ பெண்களைப் பார்த்தேன், பேசினேன், தொழில் ரீதியா பழகவும் வேண்டியிருந்தது. அப்போதெல்லாம் நடக்காதது இப்போ மட்டும், சுகன்யா விஷயத்துல மட்டும் ஏன் நடக்கணும்?'

'அது என் தலையெழுத்து! உங்கம்மாவும் நானும் செய்த கர்மா!'

'உங்க தலையெழுத்தை நல்லபடியாகத் தான்பா ஆண்டவன் எழுதியிருக்கான். கல்யாணமாகி சுகன்யா இந்த வீட்டுக்கு வந்தப்புறம் நீங்க அதைப் புரிஞ்சுப்பேள். இப்பவே அவ முடிவு பண்ணிட்டா... கல்யாணமான கையோட வேலையை விட்டுடப் போறாளாம். நம்ம குடும்பத்தோட முழுசா கலந்து பழகணுமாம்.'

'எப்படா கல்யாணம்? அதையும் அவளையே முடிவு பண்ணச் சொல்லிடேன்...'

'பார்த்தேளா... திரும்பவும் எகத்தாளமாகப் பேசறேளே... முதல்ல வசந்தி கல்யாணத்தை முடிச்சுடுவோம். அவ ஓபன் யூனிவர்சிடியில் கூடத் தொடர்ந்து படிக்கலாம். அடுத்த வாரமே நான் ஹைதராபாத் போய் பால கிருஷ்ணனோட அப்பாவைப் பார்க்கறேன். பாலு ரொம்ப நல்ல பையன்...'

**மா**னசிகமாய் ஹைதராபாத் எக்ஸ்பிரஸில் ஏறிவிட்டதை உணர்ந்து ஸ்ரீராம் தலையை உலுக்கிக் கொண்டான். சாப்பிட்ட தட்டை அலம்பி வைத்து, வாய் கொப்பளித்த போது, அவன் மன ஓட்ட விவாதத்தில் அப்பா மெள்ள அடங்கி வழிக்கு வந்து கொண்டிருந்தார். ஹைதராபாத்திலிருந்து தமிழ் மாப்பிள்ளையையும், வங்க-தமிழ் காம்பினேஷன் மாட்டுப் பெண்ணையும் அடுத்தடுத்து ஏற்கத் தயாராகியிருந்தார்.

வசந்தி கல்யாணத்தில் சுகன்யா சுழன்று வேலை செய்வதைப் பார்த்து அம்மா கூடப் பூரித்துக் கொண்டிருந்தாள்.

'மன்னி' என்று அவளை வாய் நிறையக் கூப்பிட்டுவிட்டு, வசந்தி அவளை ஓரக்கண்ணால் குறும்புப் பார்வை பார்த்தாள்...

**ஆ**னால்... கை துடைத்துக் கொண்டு "சொல்லுங்கோ..." என்று அவன் அப்பாவிடம் வந்து அமர்ந்தபோது கற்பனைக்கும் நிஜத்துக்கும் இடையேயான பிரும்மாண்ட இடைவெளியின் பயங்கரத்தை உணர்ந்தான்.

அப்பா பேசியபோது, அந்த இடைவெளிகளை இட்டு நிரப்ப சூப்பர் கம்ப்யூட்டர்களால்கூட முடியாது என்பது ஊர்ஜிதமானது.

(தொடரும்)

"தலைவா! மொதல்ல நிறுத்துங்க! ஊர்ல அவனவன் தேர்தல்ல தோத்துப் போன துக்கத்துல தலைவர் தண்ணி அடிக்கிறார்னு கிண்டலாப் பேசறான்..."

– பார்கவி





"பளு தூக்கும் போட்டியில் நம்ம போர்ட்டர் கலந்துக்கிட்டு தன் தொழில் புத்தியைக் காட்டிட்டான்."

"எப்படி?"

"பரிசு வாங்கும் போது 'இவ்வளவு வெயிட் தூக்கியிருக்கேன், கொஞ்சம் பார்த்துப் போட்டுக் கொடுங்க'ன்னு சொல்லிட்டான்.

– வெ. ராஜாராமன்.

## ஆண்டு மலர், மனதை ஆண்டு கொண்ட மலர்!

## வட்ட மேஜை வட்ட மேஜை

✉ 'கடிதங்கள் அழகானவை; உயிருள்ள காகிதங்கள் அவை; இதயத்தின் பிம்பங்கள்...' என்று கவியரசு வைரமுத்து சொல்வது எவ்வளவு அழுத்தமானது; ரம்மியமானது!

ஈரோடு – 9, சீனி. தேவராசன்.

✉ 'கவர்ச்சிக் கன்னியாக நினைப்பவர் படிக்க வேண்டாம்' என்ற அறிவிப்பே சில்க்கின் பேட்டியை நீங்கள் படிக்கத்தான் வேண்டும் என்று சொல்வது போல இருந்தது. நாணயத்திற்கு இரண்டு பக்கம் போல விஜயலட்சுமி எனும் மறுபக்கத்தை எங்களுக்குத் தெரியவைத்தது. யாருமே கஷ்டப்படாமல் புகழ் என்ற உச்சாணியை அடைய முடியாது என்பதைப் புரிந்து கொண்டோம். 'சில்க்'கின் மனம் திறந்த பேட்டியைப் படித்து கனம் நிறைந்த மனமாகிப் போனோம்.

திருச்சி – 17, உஷா முத்துராமன்.

✉ குன்றக்குடியை எப்படி அடிகளார் உலகறியச் செய்தாரோ, அதே போல் தமிழகத்தின் ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒவ்வொரு கிராமத்தை பொன்னம்பல அடிகள் தத்து எடுத்து, ஆதீனத்தின் சார்பாக ஒரு காப்பாளரை நியமித்து, அக்கிராமத்தை குன்றக்குடி அளவுக்கு மாற்ற முயற்சிக்க வேண்டும். அப்போதுதான் குன்றக்குடி அடிகளாரின் பரந்த நோக்கு நிறைவடையும்.

மன்னார்குடி, டி. வரதன்.

✉ புதிய பகுதிகள் அனைத்தும் ரசிக்கும்படியாக இருந்தன. மொத்தத்தில் ஆண்டு மலர், என் மனதை ஆண்டு கொண்ட மலர்.

வேம்பார், எஸ்.எஸ். வள்ளுவன்.

✉ அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதற் பரிசு பெற்ற சிறுகதை 'மறுபடியும்', ஒரு நல்ல சிறுகதைக்குத் தேவையான வரம்பு கொண்டது. மறுபடியும், மறுபடியும் படிக்கத் தூண்டுகிறது. தேர்வு செய்த குழுவிற்குப் பாராட்டுக்கள்.

பாண்டிச்சேரி, க. செல்வதுரை.

✉ அட்டையுடன் நூறு பக்கம்! அத்தனையும் பயனுள்ள பக்கம்! அதே விலைக்கு அதிக பக்கம்! வியந்து போனேன், கல்கியின் ஆண்டு மலரைக் கண்டு! பாராட்டுகிறேன் உன் சாதனையைக் கண்டு!

காப்பரத்தாம்பட்டி,
கே. ராஜாதிருவேங்கடம்.

✉ "மனசுல இருந்ததைக் கொட்டிட்டேன்" என்ற மீனாவின் பேட்டியைப் படித்தேன். பணம், லட்சக்கணக்கான மதிப்புள்ள பங்களா, கார், பகட்டான வாழ்க்கை... இவற்றையெல்லாம் கலைஞர்கள் ஜாலியாக அனுபவித்துக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறார்கள் என நினைத்துக் கொண்டிருந்தோம். ஆனால் இதன் மறுபக்கத்தில், அவர்களது மனத்திலும் எவ்வளவு ஏக்கங்கள், எதிர்பார்ப்புகள்... பணம், புகழ், செல்வாக்கு ஒரு மனிதரின் யதார்த்த, சாமான்ய வாழ்க்கையை எவ்வளவு பாதிக்கிறது என்பதற்கு இதைவிட சான்றும் வேண்டுமோ?

கொருக்கை, கே. பி. ராம், கே.பி. லக்ஷ்மன்.

✉ உள்ளாட்சித் துறை அமைச்சர், ஊர்ப் பிரச்னைகளைக் களத்தில் இறங்கி உணர்வதன் மூலம், அந்த இலாகா செம்மையடைவதுடன் சக அமைச்சர்களுக்கு ஒரு முன்னுதாரணமாகவும், விளங்குகிறது. அமைச்சரின் பதில் சஸ்பென்சாக வைக்கப்பட்டது அருமை.

கல்யாணபுரம், அ. சம்பத்.

✉ ஹரிஹரன், அனுராதா சந்திப்பு, "ஒரு இனிய கர்நாடக இசையுடன், 'கஜல்', சினிமாப் பாடல் என்று முக்கனியாக இனித்தது. இனிப்புகள் தொடர வாழ்த்துகள்.

பவித்திரமாணிக்கம், ஆரூர் அரசு.

### ரூ. 20 பரிசு பெறும் கடிதம்....

✉ 'ஆட்சியின் ஸ்திரத்தன்மை, நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு எப்படி முட்டுக்கட்டையாகிறது என்பதற்கு மிகச் சிறந்த உதாரணம் இந்த பட்ஜெட்!' என்கின்ற வரிகள்தான் நடுநிலை விமர்சனத்திற்குச் சரியான உதாரணம். சிதம்பரத்தினால் இன்னும் சிறந்த பட்ஜெட்டை அளித்திருக்க முடியும். ஆனால், 13 பக்கங்களிலிருந்தும் பல நூறு பிடுங்கல்களுக்கு மத்தியிலேயே, ஏறக்குறைய பெரும்பான்மையான தரப்பினரும் பாராட்டும் ஒரு பட்ஜெட்டை அளித்த சிதம்பரத்திற்குப் பாராட்டு. கூட்டணி ஆட்சி என்றில்லாமல், கூட்டாட்சியாகவோ ஒரே கட்சி ஆட்சியாகவோ இருந்தால் அவரது திறமை இன்னும் நாட்டிற்குப் பெரும் பயன் அளிக்கும் வகையில் உருவாகி இருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

தஞ்சாவூர் – 1, மலர்விழி முத்துவிநாயகம்.

✉ 'சம்மதம்... சம்மதம்...' கவிதையை வடித்த தமிழன்பன் அவர்களுக்கு என்னுடைய பாராட்டுக்கள்.

சென்னை – 1, வி. ஆதி.

# சுஜாதா பக்கம்



நிதியமைச்சர் ப. சிதம்பரம் பட்ஜெட் பேச்சின் போது வள்ளுவரின் 'இறைமாட்சி' அதிகாரத்திலிருந்து குறளை மேற்கோள் காட்டியது நிறைவாக இருந்தது. ('வல்லது அரசு' என்பதை வல்லத்து அரசு என்று உச்சரித்த பிழையைப் பொறுத்துக்கொள்வோம்). பட்ஜெட் பேச்சில், முக்கியமாக இந்தியாவின் ஏழைமை நீக்கத்துக்காகத் தற்போது செயல்படும் திட்டங்களுக்கு ஊக்கமளித்து, மாநிலங்கள் மூலம் அவைகளை செயல்படுத்தப் போவதை நிதி அமைச்சர் கூறினார். எல்லோரும் ஏழைமை பற்றிப் பேசுகிறோம். ஏழைமை என்பது என்ன, அதை எப்படி அரசாங்கம் மதிப்பிடுகிறது அல்லது கணக்கிடுகிறது? "இனி ஒரு விதிசெய்வோம்" என்று பாரதி தனிமனிதனுக்கு உணவை முக்கியமாகக் கருதினார். உணவு, நிழல், உடை இல்லாமை ஏழைமை என்பதில் சந்தேகமில்லை. அடுத்த வேளைச் சோறு இருக்கலாம். ஆனால் உடம்புக்கு வந்தால் மருத்துவச் செலவுக்குக் காசில்லாமை கூட ஒரு வகைப்பட்ட ஏழைமை தான்.

ஒரு நாட்டின் ஏழைமையை அளப்பதற்குக் கருவியாக, குடிமகனின் சராசரி ஆண்டு வருமானத்தைப் பயன்படுத்துவது சம்பிரதாயம். ஆனால் ஐக்கிய நாட்டு நிறுவனத்தின் யு.என்.டி.பி. ரிப்போர்ட், ஒரு நாட்டின் ஏழைமையை அளக்க புதிய அளவுகோலைப் பயன்படுத்துகிறது. ஸி.பி.எம்.: கேபபிலிட்டி பாவர்ட்டி மெஷர். திறமை - ஏழைமை அளவு என்கிறார்கள். இந்த அளவுகோலின் ஆதார சிந்தனை, உலகில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் திறமை அல்லது ஆற்றல் நிச்சயம் உள்ளது. அது வெளிப்பட வேண்டும், அதற்கு அந்த குழந்தைக்கு வாய்ப்புக்கள் தேவை. அந்த வாய்ப்புக்கள் கிடைக்க நல்ல போஷாக்கான உணவு பெற வேண்டும். அதற்கு முதலில் பிறக்க வேண்டும்! குழந்தைப் பருவத்தில் மருத்துவ வசதியின்றி இறந்து போகாமல் இருக்க வேண்டும். நீண்ட நாள் வாழ வேண்டும். இவை அனைத்தும் இருந்தால் உலகில் பிறந்த ஒவ்வொரு குழந்தைக்கும் உண்மை ஆற்றல் வெளிப்படும்.

இந்த சிந்தனையின் அடிப்படையில் ஒரு நாட்டின் ஸிபிஎம் எண்ணிக்கையைக் கணக்கிடுகிறார்கள். ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளில் எத்தனை பேர் சராசரி எடைக்குக் குறைவாக இருக்கிறார்கள் என்று கணக்கிடுகிறார்கள். இந்த எண்ணிக்கை மறைமுகமாக குழந்தையின் போஷாக்கு குறைவை காட்டும்.

அடுத்தது எத்தனை குழந்தைகள் மருத்துவப் பயிற்சி பெற்ற தாதிகளின் உதவியின்றிப் பிறக்கின்றன என்று கணக்கிடுகிறார்கள். இந்த எண்ணிக்கை மறைமுகமாக ஆரோக்கியமான பிள்ளை பெறுவதற்கான தடைகளைக் குறிக்கும். மூன்றாவதாக, பதினைந்து வயதுக்கு மேற்பட்ட பெண்களில் எத்தனை பேர் படிப்பறிவில்லாமல் இருக்கிறார்கள் என்கிற கணக்கு. இது கல்வி இன்மையின் அடையாளம்.

இந்த மூன்று எண்ணிக்கைகளை வைத்துக் கொண்டு ஒரு நாட்டின் ஸிபிஎம் எண்ணிக்கையைக் கணக்கிட்டிருக்கிறார்கள், ஒன்றிலிருந்து நூறு வரை. இதில் குறைந்த மதிப்பெண்தான் நிறைந்தது. ஒரு நாட்டின் மதிப்பெண் ஒன்று என்றால், நூறில் ஒருவருக்குத்தான் இந்த மூன்று அடிப்படை வசதிகள் கிடைக்கவில்லை என்று பொருள். நூறு மார்க் என்றால் நாட்டில் அனைவருக்குமே இம் மூன்று வசதிகளும் கிடைக்கவில்லை என்று அர்த்தம், முழு மோசம்!

இவ்வகையில் ஐநா அறிக்கை முன்னேறும் நாடுகளின் ஏழைமையை வகைப்படுத்திப் பட்டியலிட்டிருக்கிறது. சிலி 2.82 பெற்று முதலிடம் பெறுகிறது. அதன் பின் க்யுபா 7.8, தென்கொரியா 8.6 இப்படி.

இந்தியாவுக்கு எத்தனை மார்க்? 61.5! அதாவது இந்தியாவில் பிறக்கும் நூறு குழந்தைகளில் அறுபத்திரண்டு குழந்தைகள் ஐந்து பவுண்டுக்கு கம்மியான சோனிக் குழந்தைகள். இவை மருத்துவ வசதியுடன் பிறப்பதில்லை. பெண் குழந்தைகள் பதினைந்து வயசாகியும் படிப்பறிவு பெறுவதில்லை. சராசரி வருமானத்தைப் பார்த்தால் வியட்நாமும் இந்தியாவும் ஒன்று. ஆனால் ஸிபிஎம் எண்ணிக்கையில் வியட்நாம் இருபது. நாம் அறுபது!

எப்போது இந்த எண்ணிக்கை ஒற்றை இலக்கமாகும், மிஸ்டர் சிதம்பரம்?

(மீண்டும் அடுத்த வாரம்)

கதை : பெனிட்டோ குமார்

படம் : சசி

# 3 கடலோரக் கொலைகள்

வரை படத்தை ஆராய்ந்தார்கள்...

பிரதீப்! பயங்கர மூளைடா உனக்கு!

எனக்கு இதுல ஒண்ணுமே புரியலே.

பத்து வருஷத் துக்கு முன் நீ வரைஞ்ச பிளான். எதுவும் மாறாம இருக்குமா?

கிழக்கே பெரிய கோயில்; அதை யொட்டி கடல்; பின்புறம் மணல்காடு; கோயில்லேர்ந்து தென்மேற்கே 150 மீட்டர்ல ஒரு கல்லறை. அங்கிருந்து 70 மீட்டர் நடந்தா ஒற்றைத் தென்னைமரம். அதான் அடையாளம்.

ஐயோ, நந்து திரும்பி வரான்!

பிளானை சுருட்டி மறைத்தார்கள்

எடுபிடி வேலைக்கு ஆள் கேட்டீங்களே, இவன் தான். பரமகுரு. இது என் தங்கை, சீதா.

ஸ்வீட் கேர்ல்!

இந்தா ஸெண்ட் ஸ்பிரே!

தாங்க்ஸ்!

சாயங்காலம் வரோம்; கடற்கரைக்குப் போகலாம்.


மாலையில் பீச் நோக்கி நடக்க... வழியில்...
இவர் இந்த ஏரியா இன்ஸ்பெக்டர் கோபால கிருஷ்ணன். இந்த ஊர்லதான் ஜாகை. இவர் பிரதீப். ஆராய்ச்சி மேதை...
ஐ ஸீ!


கடற்கரையில்...
உங்களை மாதிரி மாடர்னா இருக்கணும்னு எனக்கு ஆசை!
இரேன்!
வீட்ல உதை விழும்.


ஜாகைக்குத் திரும்பி, இரவு சாப்பாடு முடித்து பரமகுருவும் விடைபெற...
டேய்! ஆஷா குட்டி! இங்க வா!


கொஞ்சினது போதும்; இந்த வீட்டுக் கொல்லைப்புறத்திலேயே ஒரு மண்வெட்டி இருக்கு; வேலையை ஆரம்பிக்கலாம்.


நாளைக்குப் பொன் ஆராய்ச்சி; இன்னிக்குப் பெண் ஆராய்ச்சி!
ஹும்!

(தொடரும்)



# என்றும் ஏ.வி.எம்.!

தமது எழுத்தை மட்டுமே நம்பி வாழ்ந்த ஓர் எழுத்தாளர் இறந்து போனார். அவரது குடும்பம் நிராதரவானது. கி.வா.ஜ. அவர்களும் நானும் ஒரு குழு அமைத்து, அந்தக் குடும்பத்துக்கு நிதி திரட்டி அளிக்க முற்பட்டோம். நான் ஏவி.எம். அவர்களுக்கு நன்கொடை கோரி ஒரு கடிதம் எழுதினேன். சில நாள் சென்று பதில் இல்லாது போகவே, ஃபோன் செய்து நேரம் குறித்துக் கொண்டு நேரில் சந்தித்தேன். விஷயத்தைக் கேட்டறிந்த அவர், கணிசமான தொகைக்கு ஒரு காசோலை தந்தார். நன்றி கூறி பெற்றுக் கொண்டு வீடு திரும்பி வந்து பார்த்தால், அன்றைய தபாலில் ஏவி.எம். அவர்களிடமிருந்து இன்னொரு 'செக்' வந்திருந்தது. அதே தொகைக்கு! எனக்கு தூக்கிவாரிப் போட்டது. 'என் கடிதத்தைப் பார்த்துவிட்டு அனுப்பியிருக்கிறார். பின்னர் நேரில் சந்தித்தபோது மறதியாக இன்னொரு 'செக்' தந்திருக்கிறார்!' உடனே ஃபோன் செய்து, தகவல் தெரிவித்து இரண்டில் ஒரு 'செக்'கைத் திருப்பி அனுப்புவதாகவும் கூறினேன்.

''வேண்டாம், வேண்டாம்!'' என்று மறுத்தார் ஏவி.எம். ''உங்கள் கடிதம் பார்த்து அனுப்பியதை நான் மறக்கவில்லை; நேரில் வந்தபோது வெறும் கையுடன் திருப்பி அனுப்பவும் விரும்பவில்லை; அதான்! இரண்டு செக்குகளையுமே நிதியில் சேர்த்துக் கொள்ளுங்கள்'' என்றார்!

வள்ளல் ஏவி.எம். இவ்வாறு ஓசைப்படாமல் கொடுத்தது எவ்வளவோ. பகிரங்கமாகக் கொடுத்ததும் உண்டு. அறிஞர் அண்ணா முதல்வர் ஆன பிறகு, தமக்கு வழங்கப்பட்ட ஒரு பேழையை அதே கூட்டத்தில் கருணாநிதியைக் கொண்டு ஏலம்விடச் செய்தார். மிக அதிக தொகை கொடுத்து அதை வாங்கி முதல்வர் நிவாரண நிதியைத் தொடங்கி வைத்தவர் ஏவி.எம். தொழிலாளர் நலனுக்கும் பொதுமக்கள் நலனுக்கும் மருத்துவமனை, பள்ளிக்கூடம், கல்யாண மண்டபம் என்று ஏராளம்.



• முரட்டுக்காளை

தேசபக்தர். அதனால்தான் பாரதி பாடல்களின் உரிமையை விலை கொடுத்து வாங்கி தமது படங்களில் பயன்படுத்தினார். அதே தேசபக்தி காரணமாக பாரதி பாடல்களை அரசுடைமையாக்கவும் செய்தார்.

தோல்வி கண்டு துவளாதவர். முதல் இரு படங்களும் தோல்வி அடைந்தன. 'டெக்னிகல்' பிழைகளைப் புரிந்து கொண்டு அந்தத் தோல்விகளையே வெற்றிப் படிகளாக்கினார். முயற்சி திருவினையாக்கும் என்று நிரூபித்தார்.

அடுத்தடுத்து வெற்றிப் படங்களைத் தயாரித்தவர். ஆபாசம் எட்டிப் பாராத, வன்முறைக்கு இடம் தராத வெற்றிப் படங்கள்! அது எப்படி சாத்தியமாகக் கூடும் என்று இன்றைய இளைய தலைமுறை அதிசயிக்

கலாம். முதல் காரணம், கதைக்குத் தரப்பட்ட முக்கியத்துவம். அடுத்தது, ஆபாசக் கலப்பற்ற ஆரோக்கியமான நகைச்சுவை. வெற்றிப் பட வரிசையின் தலைப்புக்களைப் பார்த்தாலே இது புரிந்து போகும். சபாபதி, ஸ்ரீவள்ளி, நாம் இருவர், வாழ்க்கை, பெண், பராசக்தி, ஓர் இரவு..

ஏவி.மெய்யப்பன் அவர்களுடைய 90வது பிறந்தநாள் ஆண்டு இது. அவர் உருவாக்கிய ஏவி.எம். ஸ்டூடியோ வுக்கு பொன்விழா ஆண்டு.

முன்னதை நினைவூட்டும் விதமாக திருமதி ராஜேஸ்வரி மெய்யப்பன், "ஏவி.எம் என் கணவர்" என்ற அருமையான புத்தகம் எழுத, முதல்வர் கருணாநிதி தலைமையில் வெளியீட்டு விழா பிரமாதமாக நடந்தது. பின்னதைக் கொண்டாடும் வகையில் எஸ்.பி.முத்துராமன் டைரக்‌ஷனில் "என்றும் சினிமா" என்ற தலைப்பில் டீ.வி. தொடர் தயாராகி அது தூர்தர்ஷன் சானல்-1, மற்றும் 5ல் சனி, ஞாயிறு கிழமைகளில் ஒளி பரப்பாகிறது.

தமது அனுபவ ஆற்றலைப் பயன்படுத்தி இன்றைய சினிமா ரசிகர்களையும் மனத்தில் கொண்டு, பழைசையும் புதுசையும் பலவிதமாகவும் இணைத்து, அலுப்புத் தட்டாமல் கொண்டு போகிறார் எஸ்.பி.எம். ஒட்டுப் போட்ட மாதிரி தோன்றாமலிருக்க சாமர்த்தியமாக, ஒரு பழம் பெரும் நடிகரை இன்றைய ஒரு முன்னணி நட்சத்திரம் சந்தித்து பேட்டி


• அரிச்சந்திரா

• நாம் இருவர்

காணச் செய்கிறார். அதையொட்டி பழைய, சம்பத்திய சினிமா காட்சிகள். கமல், குழந்தை நட்சத்திரமாக நடித்த களத்தூர் கண்ணம்மாவின் ஒரு காட்சியைத் தொடர்ந்து சகல கலா வல்லவனுக்கு ஒரு தாவுத் தாவி விட, வாண வேடிக்கையின் வண்ணச் சிதறல்கள்தான்!

ஒவ்வொரு பகுதியின் முடிவிலும் ஏவி.மெய்யப்பனின் ஒரு செயல் திறன் பளிச்சிடச் செய்து, வாழ்க்கையின் வெற்றிப்படிகள் எவை என்பதையும் உணர்த்துகிறார்.

பார்த்து ரசிக்கலாம், பின்பற்றிப் பயனும் அடையலாம்.

**- கி. ராஜேந்திரன்.**



# அத்வானியிடம் எஸ்.வி.சேகர் கொடுத்த மனு!

அண்மையில் பாரதீய ஜனதா கட்சித் தலைவர் அத்வானி சென்னை வந்திருந்தபோது, எஸ்.வி. சேகர் அவரைச் சந்தித்தார். அதுவும் அதிகாலை ஐந்து மணிக்கு. கடந்த தேர்தலின் போது, மைலாப்பூர் தொகுதி பா.ஜ.க. வேட்பாளர், வேட்புமனு தாக்கல் செய்யப் போனபோது, உடன் சென்றிருந்தவர் சேகர். இந்த நிலையில் அத்வானியை சேகர் சந்தித்ததற்கு என்ன பின்னணி? அவர் பா.ஜ.க.வில் சேரப் போகிறாரா? சேகரிடமே விசாரித்தபோது...

"அத்தனை அதிகாலையில் போய்ச் சந்தித்ததற்கு, என்ன காரணம்? யாருக்கும் தெரியக் கூடாது என்பதற்காகவா?"

"நான் அத்வானியைச் சந்திக்க விருப்பம் தெரிவித்த போது, ஆறு மணிக்கு அவர் டெல்லி புறப்படுவதால், அதிகாலை வந்தால் அவரை சந்திக்கலாம் என்று கட்சி நிர்வாகிகள் தெரிவித்தனர். எனவேதான் நான் அதிகாலையில் போய் அத்வானியைச் சந்தித்தேன். அதில் வேறு ரகசியம் ஏதும் இல்லை."

"என்ன பேசினீர்கள்?"

"தமிழ் நாடகத் துறையைச் சேர்ந்தவன் என்ற முறையில்தான் நான் அவரைச் சந்தித்தேன். அண்மையில் டெல்லியில் கிருஷ்ணர் கோவில் கட்டுவதற்கு நிதி சேகரிக்க, என் நாடகங்களுக்கு ஏற்பாடாகி இருந்தது. என் நாடகங்களை நன்கொடை கொடுத்துப் பார்த்தவர்கள் சந்தோஷமாய்ச் சிரித்தார்கள்; என்றாலும் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர்களுக்கு ஒரு வருத்தம். காரணம், அங்கே நாடகங்களுக்கு கேளிக்கை வரி விதிக்கப்படுகிறது. இதை கோவில் கமிட்டியினர் என்னிடம் சொன்னபோது, அதிர்ச்சியாக இருந்தது. காரணம் தமிழ்நாட்டிலும் சரி, வேறு பல மாநிலங்களிலும் சரி, நாடகங்களுக்கு, கேளிக்கை வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. இதைச் சுட்டிக்காட்டி, டெல்லியில் பா.ஜ.க. ஆளும்கட்சியாக இருப்பதால், அங்கே நாடகங்களுக்கு கேளிக்கை வரி விலக்கு அளிக்க வேண்டுமென்று கோரி ஒரு மனுவைக் கொடுத்தேன். அவரும் இதுகுறித்து, டெல்லி முதலமைச்சருடன் பேசி, நல்லதொரு முடிவு எடுக்கப்படும் என்று கூறினார்."

"உங்களுக்குப் பா.ஜ.க.வில் சேரும் எண்ணம் உள்ளதா?"

"நீங்களாகவே ஏதாவது கற்பனை செய்து கொண்டு, அதை நான் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்த்தால் எப்படி?"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO.TN/MS (S) M 4392 Registered as Newspaper in Srilanka
Licensed to post without prepayment under licence No. TN/MS (S) 161

மின்னுவதெல்லாம் பொன்னல்ல

# பொன்னான வாழ்வுக்கு வென்ச்சுராவை நாடுங்கள் !



வென்ச்சுராவின் பொன்னான தங்கத்தொட்டில் திட்டம் உங்கள் குழந்தையின் வாழ்க்கையை வளமாக்குகிறது; தக தக வென மின்னச் செய்கிறது.

இந்த திட்டத்தில் நீங்கள் செலுத்தும் குறைந்த முதலீட்டிற்கு பன்மடங்கு பலன் கிடைக்கிறது. நிறைந்த வருவாய்; நீடித்த பயன்.

ஆம். உங்கள் குழந்தைக்காக வென்ச்சுராவுடன் நீங்கள் ஏற்படுத்திக் கொள்ளும் உறவு ஒரு ஆயுட்காலப் பிணைப்பு.

தரையில் தவழ்ந்து கொண்டிருக்கும் உங்கள் சின்னஞ்சிறுசுகள் எங்களுடைய தங்கத் தொட்டிலில் தவழட்டும்; அவர்களுடைய எதிர்காலம் தழைத்தோங்கட்டும்.

| | | |
|---|---|---|
| முதலீடு | திட்டம் A | ரூ. 6,850 |
| | திட்டம் B | ரூ. 600 × 12 மாதங்கள் |
| | திட்டம் C | ரூ. 300 × 24 மாதங்கள் |
| வருவாய் | ஒவ்வொரு ஆண்டும் ரூ. 2,500 வீதம் 20-வருடங்களுக்கு சீரான வருமானம் (ரூ. 50,000) ! மேலும், 20-வருடங்கள் கழித்து, உங்கள் மகன் / மகள் ரூ. 5 லட்சம் ரொக்கமோ, அல்லது அதற்கு ஈடான தேக்கு மரங்களையோ பெறுதல் !! | |
| போனஸ் | அதுமட்டுமின்றி, 'கோல்ட் பொனான்சா' ஒன்றில் நீங்கள் பங்கு பெற வாய்ப்பு !! | |




## ORCHARDS & FARMLANDS

63, Eldams Road, II Floor, Teynampet, Madras - 18. Ph: 453024